உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 6 } இரௌத்திரி ஞூ தைமீ கஉ { பகுதி 7
1921 ஞூ ஜனவரிமீ 13உ

## கடவுள் வணக்கம்.

குன்றாத மூவுருவா யருவாய் ஞானக்
கொழுந்தாகி யறுசமயக் கூத்து மாடி
நின்றாயே மாயையெனுந் திரையை நீக்கி
நின்னையா ரறியவல்லார் நினைப்போர் நெஞ்ச
மன்றாக வின்பக்கூத் தாட வல்ல
மணியேயென் கண்ணேமா மருந்தே நால்வர்க்
கன்றாலின் கீழிருந்து மோன ஞான
மமைத்தசின்முத் திரைக்கடலே யமர ரேறே.

திரையில்லாக் கடல்போலச் சலனந் தீர்ந்து
தெளிந்துருகும் பொன்போலச் செகத்தை யெல்லாம்
கரையவே கனிந்துருக்கு முகத்தி லேநீ
கனிந்தபர மானந்தக் கட்டி யிந்நாள்
வரையிலே வரக்காணே னென்றாற் சுட்டி
வார்த்தை சொன்றாற் சுகம்வருமோ வஞ்சனேனை
இரையிலே யிருத்திநிரு விகற்ப மான
வின்ப நிஷ்டை கொடுப்பதையா வெந்த நாளோ.

---

வாழாது வாழவினை வந்தடைந்தோ ரெல்லாரு
மாழாழி யென்னவரு ளாறு ரழுக்காற்றோ
டேழா யெனவுலக மேசுமினி நாடுனொருவன்
பாழாகா வாறுமுகம் பார்நீ பராபரமே.

உள்ளத்தி னுள்ளே யொளித்தென்னை யாட்டுகின்ற
கள்ளக் கருணையையான் காணுந் தரமாமோ
வெள்ளத்தை மாற்றி விடக்குண்பார் நஞ்சூட்டும்
பள்ளத்தின் மீன்போற் பதைத்தேன் பராபரமே.

# ஆனந்தபோதினி

இரௌத்திரி ௵ தை ௴ ௧௨

## கல்வி.

செல்வம், கல்விச்செல்வம் பொருட்செல்வம் என இருவகைப் படும். ஆனால் செவிச் செல்வம், என்ற ஒரு செல்வமும் உளது.

> "செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வஞ்
> செல்வத்து ளெல்லாந் தலை"

(கேள்வியால் அறிவு விளக்கம் பெறுவது மற்ற எல்லாச்செல் வங்களினும் சிறந்தது) என்றார் நாயனார். ஒருவனுக்குக் கல்வி யில் லாவிடினும் கேள்வியாயினு மிருத்தல்வேண்டும் என்றார்.

இதனால் பொருட்செல்வத்தினும், கல்விச்செல்வமே சாலச் சிற ந்ததென்பது பெற்றாம். என்னெனில், கல்வி இம்மை மறுமையாய விருபயன்களையும் அளிக்கவல்ல தாதலின். இங்ஙன் கல்வியின் இத் தகைய சிறப்பைப்பற்றிக்கூற வெண்ணியன்று நாம் இதையெழுதத் தொடங்கியது. மற்றென்னை யெனின், கல்வியென்றால் என்ன? அதனால் எதைக்கற்றால் கல்விகற்றதாகும்? கல்வியை ஏன் கற்கவே ண்டும்? அதனால் உண்டாகும் நன்மை தீமைகளெவை? என்பன வற்றை யாராயவேண்டியே இதை வரையத் தொடங்குகிறோம்.

கல்வி என்றபதம் 'கல்' என்ற பகுதியினடியாகப் பிறந்து 'வி' விகுதிபெற்ற தொழிற் பெயராகும். கற்கப்படுவது கல்வி என்று கிறது. இதன்படி நாம் எதைக் கற்கக்கூடுமோ அவையாவும் கல்வியே யாகும் சாதாரணமாகக் கல்வியை மூன்று விதமாகப் பிரிக்கலாம்.

1-வது பாஷைக்கல்வி.—அதாவது ஒரு பாஷையைக் குற்ற மற வாசிக்கவும் எழுதவும் கற்றல். இலக்கிய இலக்கணக்கல்வி இதைச் சேர்ந்ததாகும்.

2-வது இதைச் சாத்திரக்கல்வி எனலாம்.—இது இம்மண்ணு லக சுகானுபவத்திற்கு அனுகூலமான ஜடசாத்திரங்களின் கல்வியா

கும். கணிதம், சிற்பம், வைத்தியம், இரசாயனம், வானசாத்திரம் முதலிய யாவும் இதிலடங்கும்.

3-வ்து இது ஞானக்கல்வியாகும்.—இதை ஆன்மார்த்தக்கல்வி என்றுங் கூறலாம்—வேதம், உபநிடதங்கள், ஆன்ம பரமான்ம இலட்சணங்களையும், மெய்யறிவையும் விளக்கிவைக்கும் ஞானநூல் களனைத்தும் இதிலடங்கும்.

1-வது வகுப்பில் கூறப்பட்ட இலக்கண இலக்கியக் கல்வியில் தேர்ச்சியடைந்தவர்கள் சாதாரணமாக வித்வான்கள் என்றழைக் கப்படுகிறார்கள்; 2-வது வகுப்பில் கூறப்பட்ட சாத்திரங்களைக் கற் றோர்கள் அந்தந்த சாத்திரங்களில் பண்டிதர்கள் என்று அழைக் கப்படுகிறார்கள்; 3-வது வகுப்புக் கல்வி கற்றோர்களுக்கு எவ்விதப் பட்டமேனும் இருப்பதாகத் தோன்றவில்லை. இவறறில்,

முதலாவது, இரண்டாவது வகுப்புகளைச்சேர்ந்த கல்விமட்டும் கற்றோர்களில் முழுதும் கற்றவர்கள் ஒருவருமேயல்லை யெனலாம. ஒவ்வொருவருக்கும் அதிகம் கற்றோரும், குறைவாகக் கற்றோரும் உண்டு என்பது உண்மை. இக்கல்வி ஒருவனுடைய பிறவிக்குண த்தை விர்த்திசெய்யும், பொதுவான புத்தியைக் கூர்மையாக்கும். அவ்வளவேயன்றி, தீயகுணம் தீய நடக்கைகளை யொழித்து நறகு ணம் நன்னடக்கைகளை யுண்டாக்க மாட்டாது. மேலும இக்கல்வி யால் அகங்காரமும் பெருமையும் உண்டாகிறது. இதனாலுண்டாகும் அகம்பாவத்திற்கு வித்தியாகர்வம் என்றுபெயர். இக்கல்வியை மட் டும்கற்று மேல்போக்காக மதக்கல்வியும் கொஞ்சம கற்றோரில் பலர் அனுவசியமான விவகாரங்களைப்பற்றி தர்க்கம புரிந்துகொண்டும், வாதாடிக் கொண்டும் பெருங்குழப்ப முண்டாக்குவதைப் பிரத்தி யட்சமாகக் காணலாம். இக்கல்வியால் செல்வமும் உலகப் புகழ்ச்சி யும் பெறலாம்.

3-வதாகிய கல்வியே இது நித்தியம், இது அநித்தியம், என் கின்ற மெய்யறிவை யளிக்கத்தக்கது. இதுவே ஆன்மவிலட்சணம் இன்னது, கடவுள் இலக்ஷணம் இன்னது, பிறப் பிறப்பாகிய பெரும் பிணியை யொழிக்கும் மார்க்கம் இன்னது என்று விளக்கி மெய்ய றிவை யளிக்கவல்லது; இதுவே மறுமைப்பயனை யளிக்கவல்லது; காமக்குரோதாதிகளை யொழித்து சாந்தியையும் கலப்பற்ற இன் பத்தையும் அழியாப் பதவியையும அளிக்கவல்லது. கல்வியா லடையவேண்டிய பயனை யளிக்கவல்லது இக்கல்வியே.

கல்வியால் நாம் அடையவேண்டியபயன் எதுவெனின் ஆன்ம லாபம் பெறுவதேயாகும்.

"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின்" என்றார் நாயனார்

"கல்வி கற்றதும் கேள்வி கேட்டதும்
நின்னைக் கண்டிடும் பொருட்டன்றோ காணே" என்றார் தாயுமானவர்.

ஆதலின், அறிவாலடையத்தக்க பயனை யளிப்பது இக்கல்வியே யாகும். அறிவாலறியத்தக்கது பரம் பொருள் ஒன்றே "தன்னை யறியவதே யறிவாம்—பின்னை யறிவது பேயறிவாமே" என்று ஆன்றோர் கூறியிருக்கின்றனர்.

அவ்வாறு கூறுவதாலேயே முன்னைய இரண்டு கல்விகளையும் நாம் அலட்சியப்படுத்தி அவை அடையத் தகாதவை யெனக் கூறுவதாகக் கருதலாகாது. முதல் வகுப்பைச்சேர்ந்த கல்வி மற்றைய கல்விக்கும் ஆதாரமானதேயாகும். ஆனால் அதைமட்டுமே கற்றுவிட்டு, அதோடு இருந்துவிடுவதில் பயனில்லை யென்பதே. அதனால் மட்டுமே கல்வியாலடைய வேண்டிய பயனை யடையமாட்டோம். அதோடு இக்கல்வி பூரணத் திருப்தியை யளிக்காது. ஆன்மார்த்தக் கல்வியொன்றே பூரணத் திருப்தியை யளிக்கவல்லது. ஏனெனில், இது அறிவைப் பூரணமாக்குகிறது. எதை யறிந்தால் யாவற்றையு மறிந்ததாகுமோ, எதைக்கற்றால் யாவும் கற்றதாகுமோ, எதைக்கண்டால் யாவும் கண்டதாகுமோ அத்தகைய மூல காரணப்பொருளை யறியும் ஞானத்தை யிக்கல்வி யளிக்கத்தக்கது.

இனி உலகில் என்ன உத்தேசத்தைக் கொண்டு யாவரும் கல்விகற்கிறார்கள் என்று பார்ப்போம். உலகில் பெரும்பாலோர் வயிறு வளர்ப்பதற்கே கல்வி கற்பது என்று கருதுகிறார்கள். சிலர் கல்விகற்றால் பொருளும் புகழும் பெறலாமென்று கருதுகிறார்கள். சிலர் நாம் ஒருவித்வானாகக் கருதப்பட வேண்டும் என்ற நோக்கங்கொண்டே கல்வி கற்கிறார்கள். இத்தகையோரில் சிலர் தங்களுக்கு உண்மையில் எவ்வளவு கல்வியுண்டோ அதைவிட அதிகக் கல்வியுடையவர்களென்று அன்னியர் தங்களை மதிக்கச் செய்ய முயன்று, உண்மையிலுள்ள சொல்ப மதிப்பையும் போக்கடித்துக் கொள்கிறார்கள். சிலர் கொஞ்சம் இலக்கண இலக்கியங் கற்றமட்டிலேயே நமக்கு யாரும் இணையில்லை யெனக்கருதி, ஆன்றோர் நூல்களில் தங்களுக்கு விளங்காதவைகளை யெல்லாம் குற்றமெனக்கூறி வாய்கூசாது கண்டித்துப் பாபமூட்டை கட்டிக்கொள்கிறார்கள். இத்தகையோரிற் சிலர் இக்கருத்துகொண்டே ஆன்மார்த்த நூல்களிலும் இரண்டொன்றை வாசித்துவிட்டு குதர்க்கவாதம் செய்துகொண்டு இடர்ப்படுகிறார்கள். இனி மெய்யறிவைப் பெற வேண்டும் என்றகருத்தோடு கல்விகற்போர் மிகச்சொற்பம் என்றே கூறலாம். இவ்விஷயத்தில் இவர்கள்நோக்கத்தின்படி கல்வியை உத்தமம், மத்திமம், அதமம் என்று மூன்று வகையாகப் பிரிக்கலாம். இவற்றில்,

உத்தமம்.—மெய்ப்பொருளை யறியக்கற்பது.
மத்திமம்.—புகழும், பொருளு மடையவிரும்பிக் கற்பது.
அதமம்.—வயிறு வளர்க்கவென்று கற்பது.

அந்தோ! புண்ணிய பூமியாகிய நம் பரதகண்டத்தில், அதிலும் விசேடமாக இத்தென்னாட்டில் பெரும்பாலோர் அதமக்கருத்துக் கொண்டே கல்வி கற்கிறார்கள் என்பது வெளிப்படை. மனிதனாகப் பிறந்தவன் ஜீவனம் செய்ய முயலவேண்டியது அவசியமே. நம்மவரோ ஜீவனத்திலும் அதமமான சேவகாவிர்த்தியை—அடிமைத் தொழிலையே—கௌரவமாகக்கருதி அதற்காகவேண்டிய கல்வியையே பிரதானமாகக் கற்கிறார்கள். இதனால் ஒருபோதும் க்ஷேம மடைந்து மற்ற நாட்டாரைப்போல் முன்னுக்கு வரமாட்டோம் என்பதை யுணருகிறார்களில்லை. ஆன்மார்த்தமாகிய மதக்கல்வி யிலோ எள்ளளவு சிந்தனையுமில்லை.

நம்முன்னோர் மிக்க நுண்ணறிவோடு சரியை கிரியையாதிக ளைப்பற்றிச் செய்திருக்கும் ஏற்பாட்டால், ஆங்காங்கு கோயில்க ளிருப்பதாலும், அப்போதைக்கப்போது அவற்றிலுள்ள மூர்த் தங்கள் வெளியில் எழுந்தருளுவதாலும், விரதங்கள், உபவாசங் கள் முதலியவை அனுஷ்டானத்தி லிருப்பதாலுமே, நம்மவர் அப் போதைக் கப்போது கடவுளைச்சிந்திக்கவும், அவரைப்பற்றிப்பேச வுமாவது வழியிருக்கிறது. நமது மதக்கல்வி சற்றுமின்றி, அன்னிய பாஷையில் உயர்தரக்கல்வி கற்றவர்களில் அனேகர் கடவுளை நினைப் பூட்டும் இச்சம்பவங்களைக்கூடச் சட்டை செய்வதில்லை. சுயமத உணர்ச்சி யில்லாததாலும், அன்னிய பாஷைக்கல்வியால் அன்னிய மதாசாரவாசனையின் திமிரம் மனதில் ஏறியிருப்பதாலும், இவர்கள் சரியை கிரியையாதிகளை (Nonsense! Vain Superstitions) "முட் டாள்தனம்; வீணான மூடக்கொள்கைகள்" என்று கூறிவிடுகிறார் கள். இவர்கள் நாஸ்திகத்திற்கு இரண்டாவது படியிலிருக்கிறார்கள். நாஸ்திகர் அடியோடு கடவுள் இல்லை என்கிறார்கள்; இவர்களோ "கடவுள் இருக்கிறார்; ஆனால் அவரைப்பற்றி நமக்கென்னகவை" என்ற எண்ணத்தி லிருக்கிறார்கள்.

நமது தாய்ப்பாஷையில் அபிமான மில்லாவிடின் நமது மதக் கல்வி கற்கவழியில்லை. இனியேனும் பெற்றோர்கள் நம் மக்களுக்கு 'ஆரம்பத்தில் நம் தாய்ப்பாஷையைப் போதித்து, அதன் வழியாக நம்மதத்தைப் போதித்துப் பிறகு எக்கல்வியேனும போதிப்பார்க ளாயின் நம் நாட்டில் தெய்வீகஞானம் குன்றாது; தாய்நாடு எல்லா விஷயங்களிலும் பழைய உன்னத நிலையையடையும். இப்போது துரைத்தனத்தார் கல்வி விர்த்தியை நம்மவர் வசமே யொப்பித் திருப்பதால், இந்த நன்மையைச் செய்யவேண்டியது தேசத்திற்கு

நன்மை செய்யவென்று எவ்வளவோ பெருமுயற்சியெடுத்துக்கொண்டு மந்திராலோசனை சபைகளுக்கு அவயவிகளாகச் செல்லும் நம்மவர் கடமையேயாகும் - இவர்கள் தாய் நாட்டின் க்ஷேமத்திற்குப் பாடுபடவே சென்றது உண்மையாயின், இனியும் ஆலசியம் செய்யாமல் இந்த முதன்மையான உதவியைச் செய்வார்களென்று பிரார்த்திக்கிறோம். "தெய்வம் காட்டும்-ஊட்டுமோ?' கருணாநிதியாகிய பரம்பொருள் பாரதமாதாவின் க்ஷேமத்தைக்கருதி இவ்விஷயத்தில் அருள்புரிய வேண்டுமாய் அனைவரும் பிரார்த்திப்போமாக.

ஓம் தத் ஸத்.

---

## ஆரம்ப ஆசிரியரும் அவர்தங் கடமையும்.

ஆரம்ப ஆசிரியராயிருக்கப்பட்டவர்கள் எத்தேயத்தினராயினும், தத்தம் தேயத்திற்கேற்ப, தத்தம் தேயத்துப் பிற்காலப் பிரஜைகளாக வருபவர்களும், தம்மிடத்தில் ஒப்புவிக்கப்பட்டவர்களுமாகிய குழந்தைகளை; தத்தமக்கு வேண்டிய ஆகாராதி உடைகளையே விரும்பி வேண்டுபவராயிருப்பதுபோல், தத்தம் தேயத்திற் கிணங்கவே தயார் செய்ய வேண்டியது நமது முதற்கடைமையாகுமென உணரவேண்டுவது அவசியமாகும்.

தற்போது நம்மவர்க்கு நம் மதத்தில் அருவருப்பும் அலக்ஷியமும் தோன்றவே, மதப்படிப்பு அவசியம் என உணரத் தலைப்பட்டிருக்கிறார்கள். ஆகவே, அதற்கேற்ப "சுதேசமித்திரனின்" 29-11-20 பிரசுரத்தில் பிரசுரித்திருக்கும், (மத்திய ஆப்பிரிக்காவில் ம-า-า-ஸ்ரீ வி. எப் ஆண்ட்ரூஸ் என்பவர் சாந்திநிகேதன் ஆச்ரமத்தைப்பற்றிச் செய்த) உபந்நியாசத்தில் நித்திய கர்மங்களைப்பற்றிமட்டும் எனது ஆரம்ப ஆசிரிய சகோதரர்கள் கவனிக்குமாறு தொகுக்க விரும்புகிறேன். அவை பின் வருமாறு:—

"இந்த ஆச்ரமத்திலுள்ள பிள்ளைகள் செய்துவரும் நித்திய கர்மங்களைப் பற்றிய ஒரு நாள் சரித்திரத்தை நீங்கள் கேட்பீர்களானால், அதன் உண்மையான பெருமை இன்னதென்று உங்களுக்கு வெளியாகும். அருணோதய காலத்தில், பக்ஷிகள் தங்கள் கூடுகளிலிருந்து வெளிப்படுமுன் அந்த மாணவர்கள் தங்கள் நித்திரையிலிருந்து எழுந்து விடுவார்கள். தேவதாத் தோத்திர கீதங்களைப் பாடுபவர்கள்தாம் முதல் முதல் எழுந்திருப்பவர்கள். இவர்கள் இனிய கீதங்களைப் பாடிக்கொண்டு ஈச்வர தோத்திரத்துடன் அந்த ஆச்ரமத்தை அருணோதய காலத்தில் பிரதக்ஷணமாக வருவார்கள். விடியற்கால வேளையாகையால் இந்த கீதம் வெகு தூரம் வரையில் கேட்கும்.

இதற்குப் பிறகு ஒவ்வொரு மாணவரும் தம்தம் ஆசனமாகிய சதுரக் கம்பளியை எடுத்துக்கொண்டு தோட்டத்திற்குள் போய் அதை விரித்து அதன்மேலில் தனிமையாக வீற்றிருந்து தியானபாவத்தை யடைவார்

கள். பிறகு, தியான முடிந்தவுடன் எல்லோரும் எழுந்து ஒரு இடத்தில் கூடி, தேவதாதோத்திர கீதங்களைப்பாடுவார்கள். பிறகு பள்ளிக்கூடத்திற்குச் சென்று அங்கு வித்தியாப்பியாஸம் செய்வார்கள். காலை 10-30-மணி வரையில் பள்ளிக்கூடம் நடைபெறும். பள்ளிக்கூடத்திற்காகத் தனிக்கட்டிடம் கிடையாது. மாணவர்களும், உபாத்தியாயர்களும், ஆங்காங்குள்ள மரத்தடிகளில் உட்கார்ந்து விடுவார்கள். பெரியபெரிய வகுப்புகள் கிடையாது. 8 அல்லது 10 மாணவர்களுக்கு ஒரு ஆசிரியர். இந்த ஆசிரியர் இவர்களைக் கேள்விகள் கேட்பார். மாணவர்கள் பதிலுரைத்து வருவார்கள். அதிக பாட புஸ்தகங்களும் கிடையா. பிளேட்டோ சொன்னதைப் போல் கல்விப் பயிற்சி, ஸம்பாஷணைகள் மூலமாகவே, உபதேச முறையாக, நடந்து வருகிறது. மாணவர்கள் தங்களுக்குண்டாகும் சந்தேகங்களைப் பிரசனைகள் மூலமாகத் தெரிவித்துக் கொள்ளுகிறார்கள். ஆசிரியர்கள் தங்கு தடையின்றி மிகுந்த பிரியத்துடன் பதிலளித்து அவர்களுக்குச் சந்தேக நிவர்த்தி செய்து வைக்கிறார்கள். இம்மாதிரியான கல்வி முறையில் மாணவர்களுக்கு அசிரத்தை யேற்படாது.

இதற்குப் பிறகு மாணவர்கள் ஸ்நானம் செய்து விட்டு போஜனம் செய்யப் போவார்கள். பிற்பகல் சுமார் 2-மணிக்கு மறுபடியும் பள்ளிக்கூடம் தொடக்கமாகும். ஆனால் இப்போது கைத்தொழில் கற்பிக்கப்படும். இதில் ஒவ்வொரு மாணவரின் இயற்கையான சக்தியும் மனப்போக்கும் சீக்கிரத்தில் வெளியாகிவிடும். எனவே தச்சுவேலையோ, யந்திர வேலையோ, சித்திர வேலையோ, சங்கீதமோ, யார்யாருக்கு எதெதில் மனது பரவுகிறதோ, அதது அவரவருக்குக் கற்பிக்கப் படுகிறது. பிற்பகலில் புத்தக பாடமே கிடையாது. மாலை 4-மணிக்கெல்லாம் பள்ளிக்கூடம் முடிந்து போகும். உடனே பக்கத்திலுள்ள பெரிய மைதானத்தில், கால் பந்து விளையாடப் போவதற்காக மாணவர்கள் மிக்க ஆவலாக ஓடுவார்கள். சாந்தி நிகேதனிலுள்ள மாணவர்கள் இந்த விளையாட்டுக்களில் கை தேர்ந்தவர்களென்ற கியாதி எங்கு முண்டு. பிறகு சந்தியா காலத்தில் மாணவர்கள் தங்கள் இருப்பிடத்திற்குத் திரும்பி வந்து காலையில் செய்ததுபோல, மறுபடியும் தனித்தனியே ஆசனத்திலமர்ந்து, ஈசுவரத் தியானம் செய்வார்கள். இரவில் நல்ல படிப்பினைகளடங்கிய கற்பிதக் கதைகளும், நாடகங்களும் உபதேசம் செய்யப்படும். குரு தேவருடைய கவிகள் பாடப்படும். இதோடு பள்ளிக்கூட சம்பந்தமான கூட்டங்களும் நடைபெறும்.

இரவு 9-மணிக்கு எல்லோரும் நித்திரைக்குப் போவார்கள். அதற்கு முன் ஒருதரம் எல்லா மாணவரும் கூடி தேவதா தோத்திர கீதங்களைப் பாடுவார்கள். இம்மாதிரி காலங் கழிக்கும் மாணவர்களுக்கு சந்தோஷமும் இன்பமுமே மேலிட்டு நிற்குமென்பதில் சந்தேகமே கிடையாது. எங்களது சாந்தி நிகேதனிலிருக்கும் மாணவர்களைப்போல் ஸ்வதந்திர வாழ்வு படைத்தவர்கள் இந்தியாவிலேயே வேறொருவரும் இல்லையென்றே சொல்லலாம்."

P. பரிமணப்பல்லவராயர்.

---

## பாலுக்குப் பூனையைக் காவல் வைக்கலாமா ?

சகோதர சகோதரிகளே !

நெடுநாள் மக்கட்பேறின்றி, கடுந்தவம் செய்ததின் பயனாக, ஒருவனுக்கு, பேயோ, இராக்ஷசனோ, பிள்ளையாகப் பிறந்தால், பெற்றவனது மனம் எவ்வாறிருக்கும். இவன் மன நிலைமையை நாம் யூகித்து அறிந்து கொள்ளவேண்டியது. சமீபத்தில் சென்னையில் நம் பெண்களுக்காக, ஏற்படும் கலாசாலை விஷயமாக அறிந்தோமேயானால், முன் சொன்னவன் மன நிலைமையை நாமும் அனுபவத்தில் உணரலாம். நெடுநாளாகப் பெண்கல்வி பெண்கல்வி என்று கூக்குரலிட்டதற்கு, தற்காலம் இக்கலாசாலை நேரப்போவது, மேல்சொன்ன உதாரணத்தை ஒக்கும்.

நமது நாட்டாரின் சிறந்த தெய்வபக்தி, சத்தியம், ஒழுக்கம், கற்பு, மாதர்களின் மேன்மை, முதலியன வெல்லாம், தற்கால நாகரீக முறைமைகளாலும், கல்லூரிகளில் ஏற்பட்டிருக்கும் கல்வி முறைகளாலும் ஏனையவற்றாலும் அடியோடு மழுங்கிக் கிடக்கின்றன. கிருஸ்துவக் கலாசாலைகள் ஆங்காங்கே, ஏற்பட்டதின் பயனாக, அநேக மாணவர்கள் கிருஸ்துவ மதத்தைத் தழுவியதுடன், அநேகருக்கு இந்துமதத்தினிடம் இருக்கவேண்டிய அபிமானம் கெட்டுவிட்டது. பின் அரசாங்கக் கலாசாலைகளில் என்றாலோ, அவ்விடமும், மாணவர்களுக்கு இந்து மதத்தைப்பற்றிப் போதிப்பதில்லை. அவர்கள் கற்க விரும்பினாலும், அவகாசமற்றவர்களாயிருக்கிறார்கள். முடிவில் இக்கல்லூரிகள் மாணவர்களை நாஸ்திகர்களாகவும், மதாபிமான மில்லாதவர்களாகவும், சுய நம்பிக்கை, சுய முயற்சியின்றிப் பிறர் நம்பிக்கைமேல் காலங் கழிப்பவர்களாகவும், சுயாதீனத் தொழிலை யிகழ்ந்து, அதமமாகிய சேவகாவிர்த்தியைக் கௌரவமெனக் கருதுபவர்களாகவும், ஆக்கிவிடுகின்றன. நம்முடைய நாட்டில் ஒவ்வொரு குடும்பத்திலும், மேல் சொல்லிய தன்மைவாய்ந்த பிள்ளைகள் இருந்து வருகிறார்கள். அநேக குடும்பத் தலைவர்களும் மேல் சொன்னவர்களைச் சார்ந்தவர்களே. இதுவரையிலும், இவர்கள் இஷ்டப்படிசெய்து அடியோடு கெடாவண்ணம் தடைசெய்தது இவர்களுடைய மாதர்களே. பெண்கள் பெரியோர்களின் ஒழுக்கங்களைக் கைவிடாது, கணவன் பிள்ளைகள் ஏளனம் செய்யினும், கடவுளின் ஞாபக மூட்டக்கூடிய பண்டிகைகள், விரதங்கள் முதலியவைகளை அநுசரித்துக்கொண்டு வருவதால், இந்துமதமும் இன்னும் இருந்துகொண்டு வருகிறது என்று சொல்லுவதற்கேனும் வாயிருக்கிறது. ஆனால் இப்போது இதற்கும் மோசம் வரும்போல் தோன்றுகிறது.

சமீபத்தில் சென்னை ஜார்ஜ் டௌனில் இந்து பெண்களுக்காக, உயர்தரக் கலாசாலை ஏற்படப் போகிறதாம். அதில் கிருஸ்துவ சந்நியாசினிகள் (Nuns and Sisters) உபாத்தினிமார்களாக இருந்து, நமது பெண்களுக்குக் கல்வி போதிக்கப் போகிறார்களாம். இக்காரியம் நடைபெற்றால் அந்தோ! நமது மதத்தின் முடிவுகாலம் சமீபித்தது என்று கருதவேண்டியதே!

தற்கால நாகரீகத்தில் சிக்குண்டு மயங்காது, நல்ல ஸ்திதியில் இருந்து வருகிறவர்கள் பெரும்பாலும் நமது பெண்களே. அந்தோ!

அவர்களுக்கும் கெடுதல் காலம் சமீபித்தது போலும். நமது நாட்டுப் பெண்களுக்கு கல்வி கற்பிக்க, நம் இந்து மாதர்களெல்லாம் எங்கு போனார்கள்? இந்து உபாத்தினிமார்களைவிட கிருஸ்துவ சந்நியாசினிகள் எதில்சிறந்தவர்கள்? இக்கலாசாலை நடைபெறுமேயானால் அது பாலுக்குப் பூனையைக் காவல் வைத்ததாகவே முடியும். இதில் மற்றொரு விபரீதம் என்னவென்றால், பெண்களுக்கும் தற்காலம் மாணவர்கள் கற்றுவரும், கலாசாலைப் (University Education) படிப்பையே கொடுக்கப்போகிறார் களாம். இப்படிப்பு மாணவர்களுக்கே இவ்வித நன்மையைக் கொடுத்திருக் கின்றதென்றால், பெண்களுக்கு எவ்வித நன்மையைக் கொடுக்கும் என் பதை இதை வாசிப்போரே நன்கு யோசியுங்கள்! சில நாட்களுக்குமுன் சிதம்பரத்தில் நடந்தது நண்பர்களுக்கு கியாபகத்தில் இருக்கும். அமெரிக்கா மிஷினெரிகள் செய்துகொண்டு வரும் பிரயத்தனங்களைப் பற்றியும் கேட்டு இருப்பீர்கள் என்று நம்புகிறோம். ஆகையால் நண்பர்களே! நமது மாதர்களின் மேன்மையையும், கற்பென்னும் தெய்வத் தன்மையையும், மதத்தையும், தாய் நாட்டையும் காப்பாற்றும் பொருட்டு, ஒவ்வொருவரும், மேற்சொன்ன பள்ளிக்குத் தங்கள் பெண்களை அனுப்புவதால் நேரிடக்கூடிய பெருந் தீங்கைப்பற்றித் தீர்க்காலோசனை செய்வீர்கள் என நம்புகிறேன்.

இத்துடன், நமது பெண்கள் கல்வி கற்க, ஆங்காங்கு பெண்கள் பாடசாலைகளைத் தாபிக்க முயன்று வரவும், பெரிய நகரங்களில் பெண்கள் உயர்ந்த படிப்பைப் படிப்பதற்கு வேண்டிய சவுகர்யமான, இந்து மாதர்களால் நடத்தக்கூடிய உயர்தரக் கல்லூரிகளையும் தாபிக்க உங்களால் ஆன பிரயத்தனங்களைச் செய்யவும் வேண்டுகிறேன். கடவுள் அருள் புரிவாராக.

தங்கள் நேசன்,

வை. நடேசன்,

செவ்வாய்பேட்டை.

---

குறிப்பு:—மேற்கண்ட விஷயம் நமது சகோதர சகோதரிகள் அனைவரும் ஆழ்ந்து கவனிக்கத்தக்கது. இந்துக்களாகிய நமக்கு நமது மதமும், மதாசாரங்களுமே மற்றை யாவற்றினும் பிரதானம் என்பதைப்பற்றி நாம் விவரமாக எடுத்துக் கூறுவது அநாவசியம். நமது மதமும், நமது மாதரசிகளின் கற்பாகிய தெய்வத் தன்மையுமே நம் தாய் நாட்டின் க்ஷேமத்திற்கு இன்றியமையாத ஆதாரமாகும்.

இப்போது நமது நண்பர் கூறுவதுபோல் பெண்களுக்காக ஏற்படுத்தப்படும் உயர்தரக் கலாசாலையில் கிருஸ்தவ உபாத்தினிகளைவைத்து நமது பெண்களுக்குக் கல்வி கற்பிக்க துரைத்தனத்தார் ஏற்பாடு செய்யப்போகிறார்கள் என்ற விஷயம் எதுவரையில் உண்மையென்பது நமக்கு இன்னும் தெரியாது. ஆயினும் அப்படி நடப்பதாயின் என் செய்வது என்பதைப் பற்றிச் சிந்திக்க வேண்டியது அவசியமேயென நமக்குப் புலப்படுகிறது.

நம் நாட்டில் பூர்வீகத்தில் பெண்களின் கல்வி என்னநிலைமையிலிருந்தது, அவர்கள் எத்தகைய கல்வி கற்றிருந்தார்கள் என்று நோக்கின், அவர்கள் நம் தாய்ப்பாஷையில் இலக்கண இலக்கிய நூல்களும், ஞான நூல்களும், இலௌகிக ஆசாரங்களையும் தெய்வ வழிபாட்டையும் பற்றிய நூல்களுமே கற்றதாகத் தெரிகிறது. இப்போது நம் நாட்டில் பெண் கல்வி குறைவாயிருக்கிற தென்பது யாவருமறிந்த விஷயமே. ஆயினும், பெண்களுக்குக் கல்வி கற்பிப்பதால் கெடுதி நேரிடுகிறதென்று அபிப்பிராயப் படுவோரும் நம் நாட்டிலில்லாமலில்லை. எழுதப் படிக்கக் கற்ற பெண்களில் இரண்டொருவர் தங்கள் கல்வியைத் தகாத வழியில் உபயோகிப்பதே இத்தகைய அபிப்பிராயத்திற்குக் காரணம். இதனுலே பெண்களுக்குக் கல்வி கூடாதென்று கருதுவது தவறேயாயினும், பெண்கள் கற்க வேண்டிய கல்விக்கு ஒரு வரம்பிருத்தல் அவசியமென்பது அறிவாளிகள் மறுக்கொணாத விஷயமேயாகும்.

அன்னிய நாட்டாருடைய பழக்கங்களையும், ஆசாரங்களையும் பற்றிக் கூறும் பாடபுத்தகங்களையும், புறச்சமயிகள் எழுதும் புத்தகங்களையும் வாசிப்பதால் நமது ஆண்மக்கள் எத்தகைய சீர்கேடடைந்திருக்கிறார்கள் என்பது யாவருமறிந்த விஷயம். அவர்களுக்கு நமது மதக்கல்வி போதிக்கப்படாததால் சீக்கிரத்தில் நமது மதத்தை யலட்சியமாகக் கருதவும் நம் மூன்னோர்களை மூடர்களாகக் கருதவும் துணிந்து விடுகிறார்கள். கடைசியில் உலோகாயதத் தன்மைபடிந்து, ஈசுர சிந்தனை யடியோடில்லாதவர்களாகி, பொருள் சம்பாதிப்பதும், உண்பதும், உறங்குவதும் மட்டுமாகக் காலத்தைக் கழித்து, அரிய மானிடப்பிறவியா லடையவேண்டிய பயனை யடியோ டிழந்துவிடுகிறார்கள். இத்தகையோர் இஜ்ஜன்மத்தில் அடைந்த சகவாசம் பழக்கம் ஆகிய இவற்றின் வாசனைப்பலத்தால் மறுமையில் உண்ணல் உறங்கல் மட்டுமேயுடைய பிறவிகளாகவோ, உலக போகத்தையே யாவற்றிலும் சிறந்ததாகவும், மாதரைத்தெய்வத்திற்குச் சமம் அல்லது அடுத்தபடியாகவும் கருதும் உலோகாயதராகவோ ஜன்மிப்பார்களென அஞ்ச வேண்டி யிருக்கிறது என்று பிறவி இரகசியமறிந்த ஆன்றோர் கூறுகின்றனர்.

நமது ஆண்மக்களில் உயர்தரக் கல்விகற்றுப் பட்டதாரிகளாக இருப்போர்களிலும் பலர் மேற்கண்டவாறிருப்பினும், மேலே நமது நண்பர் கூறியபடி மாதர்களாலேயே நமது மதாசாரங்கள் இன்னும் நிலை நிற்கின்றன.

இவ்வாறிருக்க இன்னும் மாதர்க்கே அத்தகைய கல்வியைக் கற்றுக் கொடுப்பதாயின் கடவுளே சகிக்காமல் நம்மை யடியோடழித்துவிடுவார் என்பது திண்ணம். நமது மாதர்க்கு எத்தகைய கல்வி வேண்டும்? எவ்வளவு கல்வி போதுமானது? என்பதை யுணர்வது பெருங்கஷ்டமல்ல. சாதாரண நூல்களை வாசிக்கப் போதுமான இலக்கண இலக்கியம், குடும்ப விவகாரத்திற்குப் போதுமான கணக்கு, சுகாதார வழிகள், கற்பிலக்கணங்களையும், குலாசார மதாசாரங்களையும், ஈசுர பக்தியையும் போதிக்கும் நூல்கள், சுருக்கமான பூகோள சாத்திரம், பக்தியோடு கடவுளைப் பாடித் துதிக்கப் போதுமான சங்கீதம், முதலியவைகளே நமது

பெண்மக்களுக்குப் போதிய கல்வியாகும். ஆண்மார்த்த நூல்களை யெவ்வளவு கற்றாலும் கற்கலாம். இதைவிட்டு இப்போது நம் ஆண்மக்கள் கற்கும் கல்வியை யவர்களுக்குப் போதிக்கக் கருதுவதைவிட கல்வியே யில்லாதிருக்கச் செய்வது பெரும் புண்ணியமாகும்.

நமது மதம் போதிக்கப்படாமலிருப்பது நமது ஆண்மக்களுக்கே மிக்க கெடுதியை விளைவிக்கிறது. அன்னிய மதஸ்தரால் எழுதப்பட்ட நமது முன்னோர் சரித்திரங்கள், ஆசாரங்கள் முதலியவை யடங்கிய பாட புத்தகங்களை நமது மக்கள் வாசிக்கும்படி விடுவது பெருந் தீங்கை விளைவிக்கிறது. அன்னிய மதஸ்தருக்கு நம் மதத்தில் நம்பிக்கை யில்லை. ஆதலால் அவர்கள் நமது மதாசார சம்பந்தமான விஷயங்களைப்பற்றி எழுதும்போது தந்திரமாகவே அவற்றைத் தாழ்வுபடுத்தி அல்லது அவற்றிலுள்ள மகிமையையும் உயர்வையும் நீக்கிவிட்டு வரைகிறார்கள். அத்தகைய புத்தகங்களை வாசிக்கும் நமது மக்களுக்கு நமது மதத்தில் ஒருவிதத் தாழ்வான அபிப்பிராயமும், அவநம்பகமும், அலட்சியமும் ஆரம்பத்திலேயே யுண்டாய் விடுகின்றன.

இதற்கு இரண்டொரு திருஷ்டாந்தங்கள் மட்டும் கூறுகிறோம். நமது புராணக்கொள்கைப்படி சாக்ஷாத் பரம்பொருளை துஷ்ட நிக்ரக சிஷ்ட பரிபாலனார்த்தம் இப்பூவுலகில் ஸ்ரீ இராமபிரானாக அவதரித்தார் என்று நாம் நம்புகிறோம். அவ்வாறே நமது பிரபல சாத்திரங்கள் கூறுகின்றன. அப்படி யிருக்க தற்சமயம் நமது பிள்ளைகள் வாசிக்கும் ஒரு பாடபுத்தகத்தில், இராமரைப்பற்றி எழுதப்பட்ட பாடத்தில், அவரை ஒரு சாதாரண மனிதனாகவே விவகரித்து முடிவில் ஹிந்துக்கள் அவரை வணங்குகிறார்கள் என்று கூறப்பட்டிருக்கிறது. வின்கிளேர் என்ற ஆங்கிலர் எழுதியுள்ள இந்துதேச சரித்திரத்தில் நமது வேதம் சுமார் இரண்டாயிர வருடங்களுக்குமுன் சிலரால் வரையப்பட்டதாகக் கூறப்பட்டிருக்கிறது.

நமது மதத்தில் பக்தியும் நம்பிக்கையுமுள்ள நம் மதத்தவரால் எழுதப்பட்ட நமது மதசார சம்பந்தமான நூல்களை நம்மக்கள் வாசித்தால் தான் அவர்களுக்கு நம் மதத்தின் உண்மையும், பெருமையும் விளங்கி அதில் நம்பிக்கையும் பக்தியும் உண்டாகும். நமது மதத்தில் அவநம்பகமும் துவேஷமுமுடைய அன்னிய மதஸ்தர் நமது மதம் ஆசாரம் இவற்றைப்பற்றி யெழுதுவதாயின் அவற்றில் தோஷங்கள் கண்டு வெளியிடும் நோக்கமேஅவர்களுக்கிருக்கும் என்றுகூறவும் வேண்டுமோ. "இந்துக்கள் இன்ன இன்னவற்றைக் கடவுளாக வணங்குகிறார்கள். அவர்கள் கொள்கைகள் இன்னின்னவை" என்று மூன்றாவது மனிதரைப்பற்றி கூறப்பட்டது போன்ற புத்தகங்களை நம்மக்கள் வாசிப்பதால் "நம் மதம், நமது முன்னோர் கொள்கை, நமது முன்னோர் ஆசாரம்" என்ற அபிமானமே அவர்களுக்கில்லாமல் போவதோடு அவற்றில் அலட்சிய புத்தியும் அவநம்பகமும் உண்டாகின்றன.

அந்தோ! இத்தகைய புத்தகங்களை நமது மக்கள் வாசிக்கும்படி நாம் விட்டிருப்பது நமது மதத்தையும் நம் புண்ணிய நாட்டின் தெய்வத்தன்மையையும் நாமே யழிக்க முயல்வதல்லவோ. நமது ஆண்பிள்ளைகளையே இத்தகைய கெதியில் விட்டிருக்கிறோம். இப்போது நமது பெண்பிள்ளை

களையும் அவ்வழியில் விடுவதாயின் கடவுளால் நமக்கு அழிவு நேர்வது திண்ணம். துரைத்தனத்தார் மதவிஷயத்தில் பிரவேசிப்பதில்லையாகையால் அவர்கள் பாடசாலைகளில் நமதுமக்களுக்கு நம்மதக்கல்வி போதிக்கப்படுவதில்லை. பெண் பாடசாலைகளில் கிருஸ்துவஉபாத்தினிமார்களை அவர்கள் ஏற்படுத்தினால், நமது பெண்களை யங்குவந்து வாசிக்கும்படி யவர்கள் கட்டாயப்படுத்துகிறார்களோ? ஒருபோதுமில்லை. நமது பெண் மக்களை நமது மதக்கல்வி போதிக்கப்படாத பாடசாலைக் கனுப்புவதே பெரிய மதியீனச் செய்கையாகும். ஈசுரபக்தி யில்லாத கல்வியை நமது பெண்களுக்குப் போதிப்பதாயின் நாம் "யாவற்றினும், பிராணனிலும், மதமே சிறந்தது" எனக் கருதும் இந்து மதத்தைச் சேர்ந்தவர்களாகவே மாட்டோம். இதோடு இன்னும் அன்னியமத உபாத்தியாயர்களிடம் நமது பெண்மக்களை வாசிக்க விடுவோமாயின் நம்மிலும் மதியீனர் வேறில்லையென்றே கூறலாம்.

"உபாத்தியாயர் அன்னிய மதஸ்தராயின் அதனால் நமது பெண்களுக்குக் கெடுதியேன் வரும்?" என்று சிலர் கருதலாகும். இப்படிக் கருதுவது சுத்த அறிவீனமேயாகும். இன்னும் உலக அனுபவமறியாத பாலியர்களின் மனம் புகைப் படம் பிடிக்கும் கண்ணாடி போன்றது. முதலில் எந்த அபிப்பிராயங்களும் கருத்துகளும் அவர்களுக்கு ஊட்டப் படுகின்றனவோ அவைகள் உறுதியாக அவர்கள் மனதில் பதிந்துவிடும். பிறகு அவற்றை நீக்குவதுசுலபமல்ல. ஒரு பெண்ணினிடம்,"குழந்தாய்! நீ நெற்றியில் வைத்துக்கொண்டிருக்கும் குங்குமம் என்பது வெறும் மஞ்சள் பொடியும் சுண்ணாம்பும் கலந்ததுதானே. கடவுள் அழகாய்ப்படைத்த நெற்றியைப் பரிசுத்தமாக வைத்துக்கொண்டிருப்பதைவிட்டு இந்தப் பொட்டை வைத்துக்கொள்வது முட்டாள்தனந்தானே; நேற்று பிள்ளையார் சவுத்தியல்லவா? மனிதன் மண்ணால் செய்த உருவைத்தானே கும்பிட்டீர்கள். அது பேசுமா? நீ தன்னை வணங்குவது அதற்குத் தெரியுமா? அதைத் தெய்வமென்று நினைக்கலாமா! இதோ பார்! இந்துக்களிடம்தான் இந்த மூடபுத்திகள் இருக்கின்றன. உலகத்தில் மற்ற பேர் அப்படிச் செய்கிறார்களா பார். பரீட்சைக்கு துரைசானியம்மாள் வரும்போது இதையெல்லாம் பார்த்து உங்களைத் தொடவும் அசிங்கமடைகிறாள்" என்று இரண்டு முறை கூறினால், பிறகு அப்பெண் குங்குமத்தைத் தொடவேமாட்டாள். நமது மதக்கொள்கைகளில் அவளுக்கு வெறுப்பு தோன்றுமென்பதைக் கூறவும் வேண்டுமோ? இவ்வாறே பிரத்தியட்சமாக நடந்ததை நாமே கண்டிருக்கிறோம். அன்னிய மத உபாத்திமார்கள் நமது பெண்களுக்குக் கல்வி போதிக்கும்போது தங்கள் மதாசாரங்களின் சார்பாகவே போதிப்பார்களென்பது வெளிப்படை. நாமும் அப்படித்தானே செய்வோம்; இது மனிதனுக்கு இயற்கையல்லவா!

அன்னியமதஸ்தர் நமது இந்து மதத்தை யடியோடொழிக்கப் பகிரங்கமாய்த் துசங்கட்டியிருக்கும்போது அம்மத உபாத்திமார்களிடம் நமது பெண் பிள்ளைகளை யனுப்புவதை விட நாம் செய்யவேண்டிய மதத்துரோகம், தெய்வத்துரோகம் வேறில்லை. பெண் பிள்ளைகளையுடைய பெற்றோரில் பலர் இன்னும் இவ்விஷயத்தில் தெரிந்தோ தெரியாமலோ, கண் மூடித்தனமாகவே நடந்து வருகிறார்கள்; நம்முன்னோர்கள் எவ்வ

ளவோ ஆழ்ந்த யோசனையோடு தங்கள் திரிகால ஞானபலத்தால் அவசியமான தெனக்கண்டு ஏற்படுத்திய ஆசாரத்திற்கு முற்றும் மாறாக நடக்கிறார்கள். இரண்டொரு பெண்கள் புத்தியறிந்த பின்னும் பாடசாலைக்கு அனுப்பப்படுவதை இச்சென்னையில் கடந்தவாரம் கண்ணாரக்கண்ட நம் மனம் புண்பட்டுவிட்டது. இத்தகையோர்க்கு எப்போதுதான் நல்லறிவுதித்து இத்தகைய துர் ஆசாரங்களையும், அன்னிய மத உபாத்திமார்களிடம் நமது பெண் பிள்ளைகளைக் கல்விகற்க அனுப்புவதையும் ஆலகால விடம்போல் மதித்து அடியோடு விட்டொழிப்பார்களோ நாமறியேம்.

நண்பர்களே! மதாசாரம் குறைந்து, அக்கிரமம் அதிகரித்து, நீதி தவறி, நமது தெய்வீக மதத்திற்கு இடுக்கண் நேரும்போதுதான் பகவான் எப்போதும் அவதாரம் செய்கிறார் என்பது சத்தியம். இப்போது நாமே நம் மதத்திற்கும் நமது முன்னோர் ஏற்படுத்திய ஆசாரங்களுக்கும் அழிவு நேரிடத்தக்க வழியில் நடக்கிறோம். நமது தாய் நாட்டிற்குண்டாகும் துன்பங்களுக்கெல்லாம் இச்செய்கைகளே காரணம்.

கல்வி என்றால் வித்தை—'வித்தை' என்பது வித் என்ற தாதுவிலிருந்து வந்தது. வித்=ஞானம். ஆகையால் ஞானத்தைப் பெறவே, ஞான சொரூபியாகிய கடவுளை யறியவே கல்வி கற்பது என்பது ஆன்றோர் துணிபு. அந்தோ! அத்தகைய அறிவாளிகள் வழியிலுதித்த நாம் இப்போது கடவுள் விஷயத்தை யடியோடு நீக்கிவிட்டு மற்ற கல்வியையே நம் அரிய மக்களுக்குக் கற்பிக்கிறோம். இதனினும் நாம் நமது சந்ததிகளுக்கும், தாய்நாட்டிற்கும், ஆண்டவனுக்கும் செய்யத்தக்க துரோகம், பெருஞ்சதி வேறென்ன உளது?

இதை யுணர்ந்து இனியேனும் நம்மவர் ஒரு மனதாய், ஒரே வைராக்கியமாய், அன்னியமதம் போதிக்கப்படும் பாடசாலைக்காவது, அன்னிய மத உபாத்திமார்களிடமாவது நம்மக்களைக் கல்வி கற்க அனுப்புவதை யொழித்து, ஆரம்பத்திலேயே அவர்களுக்கு நமது மதக்கல்வியைப் போதிக்கும் முயற்சியை யெடுத்துக்கொள்ள வேண்டுமாய் சச்சிதானந்தப் பரம்பொருளாகிய பகவானை யாவரும் பிரார்த்திப்போமாக.

ஓம் தத் ஸத்.

**பத்திரிகாசிரியர்.**

---

## மாணவர்களின் ஒழுக்கமும், தற்கால நிகழ்ச்சியும்.

கல்விகற்பதும் கற்பிப்பதும் பெரும்பான்மை ஒழுக்கத்திற்கும் சிறுபான்மை இலௌகீக காரியங்களுக்குமே என்பது பிரசித்தம். "விளையும் பயிர் முளையிலே தெரியும்," என்பதற் கேற்கவும், "தொட்டிற் பழக்கம் சுடுகாடுமட்டும்," என்பதற் கிணங்கவும் யாவருடைய ஒழுக்கமும் பாலப் பருவத்தை யனுசரித்ததாகவே பல்லாண்டிற்குப் பிறகும் நிகழுமாதலாலும், நாம் மேற்கொண்ட உபாத்திமைத் தொழிலில் நம்மிடம்

ஒப்புவிக்கப்பட்ட பாலர்களை நல்லொழுக்கத்தில் பயிற்றுவதே முதற் கடமையும், எழுதப் படிக்கக் கற்பிப்பது இரண்டாவது கடமையுமாகும். ஆதலின், நமது முதற் கடமையை நிறைவேற்றுங்கால் இன்னின்ன வழிகளால் முறையைக் கடைப்பிடித்தல் வேண்டுமென்று நமது நல்லாசிரியனும் பல பெரியோர்களும் அறிவித்துக் கொண்டு வருகிறார்களெனினும், நாமும் அவ்வொழுக்கத்தைப் பின்பற்றி "நூலைப்போல் சேலை" "தாயைப்போல் பிள்ளை" என்பவைகளுக்கு இணங்க நல்லொழுக்கமாகவே நடந்து, இந்நடக்கையை நமது மாணவர்கட்கு மாதிரியாகக் காட்டியும் போதித்தும் அவர்களை முன்னுக்குக் கொண்டுவர முயற்சிக்க வேண்டுவதோடு, மாணவர்களும் தங்கள் தங்கள் சுயபுத்தியாலும் நன்மை தீமைகளை அறிந்து நடக்கும்படி செய்ய, நமது மன்னர்பிரான் ஐந்தாவது ஜார்ஜ் சக்கிரவர்த்தியவர்களின் (சமீபத்தில் கிடைத்த) ஸ்ரீமுகத்தை யனுசரித்து தற்கால நிகழ்ச்சிக் கிணங்க நடந்துவரும் ஓர் விரும்பத்தக்க விஷயத்தைப் பற்றி "பள்ளிக்கூடத்தில் மாணவர்களின் விவராஜ்ஜியம்" என்னும் தலைப்பின் கீழ் "சுதேசமித்திரன்" 7-2-1920 பிரசுரத்தில் வெளியிட்டிருக்கும் விஷய அமுதத்தை அப்படியே இதன் கீழ் எழுதுகிறேன். இம்முறையின் மேன்மையை உணரும் சகோதர உபாத்திமார்கள் தத்தம் பாடசாலைகளில் அதை அனுஷ்டித்துத் நமது முதற் கடமையை நிறைவேற்றுவார்களென்று எல்லாம் வல்ல இறைவனை ஏத்துகின்றேன்:—

"பள்ளிக்கூடங்களில் மாணவர்களின் ஒழுக்கத்தைக் கடுமையான சிக்ஷையைக் கொண்டே சீர்திருத்த வேண்டுமென்ற பிற்போக்கான அபிப்பிராயமுள்ள உபாத்திமார்கள் பின்வரும் விஷயத்தைச் சற்று ஊன்றிக் கவனிப்பார்களாக. பின்வரும் விஷயம் "டெயிலி நியூஸ்" பத்திரிகையிலிருந்து எடுக்கப்பட்டிருக்கிறது.

லண்டன் நகரில் ஹாரோவே யென்று ஒரு ஸ்தலமுண்டு. அதில் ஒரு கலாசாலையுண்டு. அந்தக் கலாசாலையில் மிஸ்டர். எர்னஸ்டு ஏ. கிராடாக் என்பவர் ஒரு உபாத்தியாயர். அவர் கல்விச்சாலைகளிலுள்ள மாணவர்களின் ஒழுக்கத்தைச் சீர்படுத்தவேண்டுமானால் அதற்கு அந்த மாணவர்களையே ஜவாப்தாரிகளாக்குவதுதான் மிக்க உசிதமான வழியென்று தமது அனுபவமுறையில் கண்டதைக்கொண்டு நிரூபித்திருக்கிறார். அதன் விவரம் பின்வருமாறு:—

மேற்படி பள்ளிக்கூடத்தில், 4-5—வகுப்பு மாணவர்கள் தங்களுக்குள்ளேயே 'க்ரிகட்டு' முதலிய சரீரப்பயிற்சி விளையாட்டுகளை ஒழுங்காக நடத்துவதற்காக ஒரு பஞ்சாயத்துக்கமிட்டி ஏற்படுத்திக் கொண்டு வெகு நன்றாகவும் சிறப்பாகவும் அது விஷயத்தை நடத்தி வந்தார்கள். 13, 14 வயதுக்கு மேற்படாத மைனர்களாகிய இந்தப்பிள்ளைகள் இவ்வளவு ஒழுங்காகத் தங்களுக்குள்ளேயே ஒருவித ஒற்றுமையுடன் கட்டுப்பாட்டால் காரியங்களை நடத்திவருவதைப் பார்த்துவந்த மேற்கூறிய சரியான உபாத்தியாயராகிய மிஸ்டர் எர்னஸ்டு ஏ. கிராடாக்குக்கு ஒரு யோசனை உதித்தது. அதாவது, "கிரிகட்டு" கமிட்டியை ஒழுங்காக நடத்த ஆற்றலுள்ள பையன்கள் வசமே அவர்களின் ஒழுக்கமுறையைப் பற்றிய பொறுப்பையும் ஒப்படைத்து விட்டால் சீக்கிரத்தில் மிகச் சிறப்பான பலன்

கிடைக்குமென்பதுதான். அவர் எண்ணியகாரியத்தைத்துணிந்து செய்ய ஆரம்பித்து, தம் வகுப்பு மாணவர்களை யழைத்து அவர்களைத் தங்கள் வகுப்பிலுள்ளோரின் ஒழுக்கமுறையைப் பரிபாலிப்பதற்காகத் தங்கள் பிரதிநிதிகளைக் கொண்டே ஒரு பஞ்சாயத்துக் கமிட்டி யேற்படுத்திக்கொள்ள வேண்டுமென்று சொல்லி அந்தப் (1) பஞ்சாயத்தானது, மாணவர்கள் பள்ளிக்கூடத்துக்குள்ளும் வெளியிலும் தங்கள் ஒழுக்கநெறி பிறழாமல் பார்த்துக் கொள்ளவும்; (2) ஒழுங்கு தவறி நடக்கும் மாணவர்களை அவர்களே விசாரித்து சிக்ஷிக்கவும்; (3) மிக நேர்மையாகவும் திறம்பட்ட ஒழுங்கோடும் நடப்பவர்களுக்கு அவர்களே தகுந்த சன்மானங்கள் அளிக்கவும்; (4) வீட்டில் ஒழிவு நேரங்களில் செய்து வருவதற்காக மாணவர்களுக்கு வகுப்பு உபாத்தியாயர்களால் விதிக்கப்படும் வேலைகளை மாணவர்கள் சரிவர நடத்தி வருகிறார்களாவென்று கவனிக்கவும் வேண்டுமென்று தெரிவித்தார். இதனுடன் பள்ளி மாணவர்களின் தேகப்பயிற்சி விஷயத்தைக் கவனிக்க வேண்டியதும், அந்தப் பஞ்சாயத்தின் வேலையாக ஏற்படுத்தினார். பிறகு உபாத்தியாயர் மாணவர்களுக்கு அன்றாடம் பாடம் சொல்லிவைக்க வேண்டிய ஒரு பொறுப்பை மாத்திரம் தாம் வகிப்பதாகவும், மற்ற மேற்கண்ட விஷயங்களை மாணவர்களே மேற்கூறிய பஞ்சாயத்து மூலமாய் திருப்திகரமாகவும், ஒழுங்காகவும் நடத்திவர ஜவாப் தாரியாக வேண்டுமென்றும் விதித்து விட்டார். அதுமுதல் இந்தப் புதிய முறையான கலாசாலைத் துரைத்தனம் ஆச்சரியமான ஒழுங்குடனும், சிறப்புடனும் நடந்து வருகிறது. சுருங்கச்சொல்லுமிடத்தில், இந்தப் பள்ளி உபாத்தியாயர் ஜவாப்தாரியான பொறுப்பு வாய்ந்த சட்டவரம்புக்குக் கட்டுப்பட்ட ஒரு அரசனாகவும், அதன் மாணவர்கள் சில சட்ட வரம்புகளுக்குட்பட்டுத் தெரிந்தெடுக்கப்பட்ட தங்கள் பிரதி நிதிகளின் பஞ்சாயத்தாரால் ஆளப்படும் சுதந்திரமுள்ள குடிகளாகவும் பாவிக்கப்படல் வேண்டும். இந்த மாணவர்களின் பஞ்சாயத்தானது சில நிபந்தனைகளுக்கு மாத்திரம் ஈடுபட்டு, மாணவர்களுக்கு வீட்டில் ஒழிவுநேர வேலையாக என்ன ஏற்படுத்தப்படவேண்டுமென்பதைக்கூட நிர்ணயிக்கலாம். இந்தப் பஞ்சாயத்தில் மிகவும் கவனிக்கவேண்டிய அம்சம் என்னவென்றால், அதற்கு ஏற்படுத்திக் கொடுக்கப்பட்டிருக்கும் விசாரணை முறையும், சிக்ஷை விதிக்கும் பத்ததியும்தான். இது சம்பந்தமாகப் பின்வரும் விஷயம் மிக்க ஆச்சரியமான ஒரு சம்பவத்தைத் தெரிவிக்கிறது. ஒருநாள் இந்தப் பஞ்சாயத்தானது வீட்டு வேலைக்காக பிரெஞ்சு இலக்கண சம்பந்தமான ஒரு பாகத்தைப் பாடமாக ஏற்படுத்தியது. இந்தப் பாடமானது இதுவரையில் கொடுத்து வந்ததைவிட மிகக் கஷ்டமானதென்று "கிராடாக்" துரையே சொல்லுகிறார். மறுநாட் காலையில் மாணவர்கள் பாடம் ஆரம்பித்ததும், இந்தப் பஞ்சாயத்தாரின் நிர்வாக அங்கத்தினர் அந்த இலக்கணப்பாட விஷயமாகக் கேள்விகள் கேட்க ஆரம்பித்தார்கள். அதில் இரண்டு பையன்கள் தவறிவிட்டார்கள். உடனே அந்தப் பஞ்சாயத்தில் நிர்வாகக் கமிட்டியின் அக்கிராசனர், தவறிய பிள்ளைகள் தவறிய விஷயத்தை ஒவ்வொன்றையும் 5 முறை எழுதி அடுத்தநாட் காலையில் கொண்டுவந்து தம்மிடம் காட்டவேண்டுமென்று சிக்ஷை விதித்தார். தவறிய இரண்டு மாணவர்களும் இந்த உத்தரவை

எதிர்த்து அதறகுக் கீழ்ப் படியவில்லை. பஞ்சாயத்தார் மறுபடியும் அந்த இரண்டு மாணவர்களும் அந்தப் பாடத்தை நான்கு முறை எழுதிக் காட்ட வேண்டுமென்று உத்தரவிட்டார்கள். அந்த முரட்டுத்தனமான இரண்டு மாணவர்களும் மறுபடியும் பஞ்சாயத்தாரின் உத்தரவை நிராகரித்து விட்டார்கள். மேலே என்ன நடந்தது தெரியுமோ? அதுதான் மிகவும் ஆச்சரியமான விஷயம். (அகம் பிடித்துத் திரியும் அநாகரீகமான அடக்குமுறைகளைப் பள்ளியில்கூட வெட்கமில்லாமல் கையாடும் போலி உபாத்திமார்களும், தன்னடக்கமும் தன் மதிப்புமில்லாமல் திமிர் பிடித்து அடங்காப் பிடாரியாகத் திரியும் மாணவர்களும் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய விஷயம் இதுவே). பள்ளியில் ஒவ்வொருவரும், புறக்கணிக்கப்பட்ட தங்கள் அதிகாரத்தையும், பாத்தியதையையும் இந்தக் கமிட்டியார் எப்படி ஸ்தாபித்துக்கொள்ளப் போகிறார்களென்று மிக்க ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். பஞ்சாயத்தார்கள் என்ன செய்தார்கள் தெரியுமோ! உடனே பஞ்சாயத்தார் சட்டத்துக்குக் கட்டுப்படாத மேற்படி இரண்டு மாணவர்களையும் முறைப்பே விசாரித்து சிக்ஷிப்பதற்காக மாணவர்களின் பிரதி நிதிகளாக 12 நபர்களை ஜூரர்களாகத் தெரிந்தெடுக்க ஒரு விளம்பரம் விடுத்தார்கள். ஜூரர்களும் வந்து சேர்ந்தார்கள். பஞ்சாயத்து அக்கிராசனர் நியாயாதிபதியாக வீற்றிருந்தார். குற்றம் சாட்டப்பட்ட இரண்டு மாணவர்களைக் காக்க சர்க்கார் தரப்புத் தலைவராக ஒரு மாணவர் ஏற்பட்டார். இரண்டு குற்றவாளிகளும் சட்டமீறி நடந்ததாகவும், அவர்களுக்குப் பஞ்சாயத்தாரா விடப்பட்ட வேலைகளை அவர்கள் செய்தே தீரவேண்டு மென்றும் தீர்ப்புச் சொல்லப்பட்டது.

இப்படியாய் குடியரசு ஸ்வராஜ்ஜியம் மாணவர்களுக்குள் நடந்தேறுகிறது. இது இப்பொழுது மிகவும் கௌரவமாக வளர்ந்து ஆரம்பத்தில் செய்த வேலைகளைவிட மிகப் பொறுப்புவாய்ந்த காரியங்களையும் நன்றாக நடத்திவருகிறது. (இந்தியக் கலாசாலை மாணவர்கள இதைக் கவனித்துப் பின்பற்றுவார்களா?,'' என்பதே.

இதில் நாம் நம் மாணவர்க்குப் போதிக்கவேண்டிய சிவிக்ஸ் பாடம் நடந்தேறுவதும் கவனிக்கத்தக்கது. தற்போதும் நமது பாடசாலைகளிலும் நடத்தப்படினும் அவைகள் இராக் கதைகள் போன்றதே. ஆதலால் மாணவர்களின் ஒழுக்க சம்பந்தமாகவே நடத்துதல் மிக்க விசேஷமா யிருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

P, பரிமணப்பல்லவராயர்,
ஹெட்மாஸ்டர், போர்ட் ஸ்கூல், உத்தமச்சேரி,
திருவளர் சோலை போஸ்டு, திருச்சி ஜில்லா.

---

## தாய்பாஷை

நமது தாய்நாடாகிய இந்தியாதேசம் நாகரீக முன்னேற்றத்தில் வெகு பழைமையானது என்னுமவிஷயம் நமதானந்தனைப் படித்துக் களிக்கும் எல்லாருக்கும் தெரிந்தவிஷயம். இந்திய சரித்திரக்காரர்களின் அபிப்பிராயத்தின்படி நம்மவரில் அநேகர் ஆவலுடன் அதன் தீங்குகளை

அறியாது பின்பற்றும் ஐரோப்பிய தேசங்கள் நாகரீகமற்று, அத்தேசத்து ஜனங்கள் மரங்களில் சஞ்சரித்து வந்தகாலத்தில் இந்தியா தேசமானது நிரம்ப நாகரீகமுள்ளதாக இருந்ததெனத் தெளிவாய் விளங்கும். உதாரணமாக, கி.மு. 3-வது நூற்றாண்டில் இங்கிலாந்து, பிரான்ஸ் முதலிய தேசத்தார்கள் இன்ன ஸ்திதியில் இருந்தனர், இன்னமாதிரி நடைநொடிபாவனைகள் உடையவர்களாக இருந்தனர், இன்னவழக்கங்களைக் கைப்பற்றியிருந்தனர் என்று தீர்மானிப்பது கஷ்டம். அப்படித் தெரிந்துகொள்ளமுயன்றாலும் அவர்கள் காடுகளிலும், புதர்களிலும், குகைகளிலும் வசித்துக்கொண்டு மிருகங்களைக் கொன்று கேவலம் பச்சையாய்த் தின்று ஜீவித்துவந்தார்கள் என்று சொல்லுவதைவிட வேறொன்றும் சொல்ல முடியாது. ஆனால் இந்தியாவிலோ அதேகாலத்தில் சந்திரகுப்த மௌரியர் என்ன, பிம்பிசாரர் என்ன, அசோகர் என்ன, இவ்விதமான சக்ரவர்த்திகள் ஜனங்களை நீதியுடனும், பக்ஷபாதமின்றி ஒழுங்காயும் ஆண்டு வந்தார்கள். அவர்கள் அரசாட்சியானது முன் காலத்தில் நாகரீகத்தில் முதிர்ந்தவர்கள் என்று எல்லாராலும் கொண்டாடப்பட்ட கிரேக்க தேசத்து தூதனான மெகஸ்தனீஸ் என்பவன் வாயைப் பிளந்துகொண்டு ஆனந்தப்படும்படியானதாக இருந்தது என்று மேனாட்டுச் சரித்திர ஆராய்ச்சிக்காரர்கள்கூட ஒப்புக்கொள்ளவேண்டியிருக்கிறது.

இது இப்படி இருக்கையில் மேனாட்டார்களே ஒவ்வொரு சாஸ்திரத்திலும் பாண்டித்திய முள்ளவர்களென்றும், நம்மவர்களில் அநேகர் எவ்வளவு கற்றிருந்தபோதிலும் அவர்களிடத்தி லிருந்து (சர்ட்டிபிகேட்கள்) யோக்கியதா பத்திரங்கள் பெற்றால்தான் நிரம்பப் படித்தவர்களென்றும், மரியாதைக்கும், கௌரவத்திற்கும் பாத்திரர்கள் என்றும் அநேகர் நினைத்துக் கொண்டிருப்பது நமது தேசத்தின் துரதிஷ்டமென்றே நினைக்கவேண்டியிருக்கிறது. ஆனால் நமது தேசத்தில் ஆதியில் இல்லாத வானசாஸ்திரமில்லை; நமது தேசத்தில் இல்லாத கணிதசாஸ்திரமில்லை; நமது தேசத்தில் வழங்காதபிரகிருதிசாஸ்திரம், வைத்தியசாஸ்திரங்கள் இல்லை; நமது தேசத்தில் சட்டம் வழங்காததில்லை. பார்க்கப்போனால் ஒவ்வொரு சாஸ்திரமும் நமது நாட்டிலிருந்தே மேனாட்டுக்குப் பரவியிருக்கிறதாகத் தெரிகிறது. மேனாட்டார்களில் சிலரும், அவர்களையே தேவதைகளென்று நினைத்திருக்கும் சில இந்தியர்களும் எழுதியிருக்கும் இந்திய சரித்திரத்தை வாசித்தால் மேல் சொன்ன விஷயங்கள் ஒன்றும் விளங்காது. உண்மையில் இந்தியா வெகுகாலத்திற்கு முன்பே நாகரீகமுற்றது. அந்த விதமான நாகரீகத்தைத் தெளிவாயும், சுத்தமாயும் தெரியும்பொருட்டுத் தகுந்த சிரமம் எடுத்துக்கொண்டு சரித்திரங்கள், சாஸ்திரங்கள், கிரந்தங்கள் முதலியவைகளை ஆராய்ந்து எழுதப்பட்டிருக்கும் சரித்திரங்களை வாசிக்கவேண்டும். ஏனெனில், மேனாட்டாரால் எழுதப்பட்டிருக்கும் சிறிய இந்திய சரித்திரங்களை நாம் வாசித்தால் நமது மனது புண்படும். அவர்கள் சொல்லுவதென்னவெனில், ஆங்கிலேயர் வருமுன்னம் நமது தேசமானது நாகரீகமற்றுச் சீர்குலைந்துகிடந்ததாகவும் அவர்கள் வந்து அரசாள நேர்ந்தபின்னர்தான் நாகரீகமென்பதே நம் ஜனங்களுக்கு ஏற்பட்டதென்றும் தேசமானது பிரம்மலோகம் அல்லது சுவர்க்கலோகம்

போல் மாறிவிட்டதென்றும் சொல்லுகிறார்கள். இவ்விதமான சிறு புஸ்தகங்களையே நமது பாடசாலைகளில் கீழ் வகுப்புகளில் பாடமாக வைத்து நமது பிள்ளைகளை வாசிக்கச் செய்கிறார்கள். இவ்விதமான சரித்திரங்களையே ஒரு சிறுவன் சுமார் பத்தாவது வகுப்புவரையில் படிக்கவேண்டியிருக்கிறது. அதைப்படித்துவிட்டு நம் சிறுவர்கள் "மேனாட்டுப் பாஷைகளிலேயே ஆனந்த மிருக்கின்றது; மேனாட்டார்களே தேவதைகள்; அவர்கள் நாகரீகமே சிறந்தது; அவர்களே சகலகலா வல்லவர்கள்; நம்முன்னோர்களுக்கு ஒன்றும் தெரியாது" என்று தப்பெண்ணம் கொண்டு, நம் தேசத்தின் பாஷைகளாகிய சமஸ்கிருதம், தமிழ் முதலியவைகளை அலக்ஷியம் செய்கிறார்கள்.

மேலும் தாய்ப்பாஷைகளைப் படிக்கவேண்டிய ஒரு அவசியமும் அவர்களுக்கு ஏற்படாமல் இஷ்டப்பட்ட பாடங்கள் (Optional)) எடுத்துக் கொள்ளும்படி சிறு பிள்ளைகளை விட்டிருக்கின்றார்கள். ஆதலின் அவர்கள் கணக்குப்பாடம், பிரகிருதி சாஸ்திர (Science) பாடங்கள் முதலியவற்றை எடுத்துக்கொண்டு தாய்ப்பாஷைகளை கவனிக்காமல் விட்டுவிடுகிறார்கள். எப்படியாவது பள்ளிக்கூட இறுதிபரீக்ஷை S. S. L. C. யில் தேறிவிட்டுக் கலாசாலைக்குப் போகிறார்கள். அங்கே புராதனபாஷை ஒன்று அவசியம் படிக்கவேண்டிய நிமித்தத்தினால் அவர்கள் தமிழ் அல்லது சமஸ்கிருதத்தை எடுத்துக்கொள்ள வேண்டி யிருந்து மிகுந்த அருவருப்புடனும் பயத்துடனும் வாசித்து வருகிறார்கள். அவை முன் அலக்ஷியம் செய்தபாடங்களாகையினால், அவர்களுக்குச் சிரமம் மெத்தவும் ஏற்படுகின்றது. இரண்டு வருஷங்கள் படித்துவிட்டுப் பரீக்ஷை எழுதுகிறார்கள். பரீக்ஷை எழுதி மூன்று மாதங்கள் கழித்து ரிசல்ட் (Result) வரும்போது பார்த்தால் இரண்டாவது பாகம் மட்டும் தேறியிருக்கிறதென்று ஏற்படும்காலத்தில் சிலர் தங்கள் மார்க்குகளை எழுதி வரவழைக்கின்றனர். அதில் பார்த்தால் பாவம் இங்கிலீஷில் மார்க்கு வந்திருக்கிறது. சிறுவயதிலிருந்து படித்துவந்த தமிழில் தான் 2 மார்க்குகள்குறைந்திருக்கின்றன. அதனால் முதல்பாகம்தேறவில்லை என்று அறிகிறார்கள். இதைத் தவிர அநேகர் எங்கே இங்கிலீஷில் மார்க்கு வரவில்லையென்றுசொன்னால் பிறர் கேவலமாய் நினைப்பார்களோ வென்று நினைத்து "நான் இங்கிலீஷில் மார்க்கு வாங்கிவிட்டேன். அந்தத் தமிழ் வியாசப் பரீக்ஷையில் (Tamil Composition) தான் குறைந்து போயிற்று" என்று சொல்லிக்கொண்டு திரிகிறார்கள். அந்தோ! தம் தாய்ப்பாஷையில் தேறவில்லை என்பது அவர் மனதில் வெட்கத்தை உண்டாக்குவதில்லை. இதிலிருந்து தமிழின் ஸ்திதி "உள்ளங்கை நெல்லிக்கனிபோல்" விளங்குகின்றது. நம் சிறுவர்களுக்கு ஏற்பட்டிருக்கும் அருவருப்புக்கும் இதுவே காரணம்.

சிலர் அருவருப்போடு நிற்பதில்லை. அன்னிய பாஷைகள் வழங்கும் தேசங்களிலிருந்து படிப்பு முகாந்தரமாகத் தமிழ் நாடுகளில் வந்து வசிக்கும் சிலர், கட்டாயத்தின் நிமித்தம் தமிழ் பேசக் கற்றுக்கொள்ளுகிறார்கள். இன்னும் சிலர் உண்மையில் தமிழில் அபிமானம் வைத்து எழுதப் படிக்கவும் கற்றுக்கொள்ளுகிறார்கள். இப்பேர்ப்பட்டவர்களைக் கெடுக்க நம் சிறுவர்கள் முயலுகிறார்கள். உதாரணமாக, நான் கலாசாலையில் படித்

துக்கொண்டிருந்த காலத்தில் (1917-18) கிருஷ்ணன் நம்பியார் என்னும் மலையாளி ஒருவர் தமிழ் கற்றுக்கொள்ள ஆவல்கொண்டு அவருக்கிருந்த ஆவலினால் ஒரே நாளில் பதம் சேர்த்து வாசிக்கவும், பதங்களின் அர்த்தங்களை அவாவுடன் கேட்கவும் ஆரம்பித்தார். மறுநாள் காலையில் அவருடைய வகுப்பு நண்பர் இரகுநாதாச்சாரி என்னும் நமது பக்கத்துத் தமிழர் அவரிடம் வந்து "Well, my friend, do not learn this wretched Tamil; it will corrupt you" (என் நண்பரே! நீர் இந்த இழிவான தமிழைப் படிக்காதீர்; அது உம்மைக் கெடுத்துவிடும்) என்று சொன்னதை மனவருத்தத்துடன் கேட்டு அவருக்குத் தெரிந்த தவ்வளவுதானென்று நான் சும்மா இருக்கநேர்ந்தது. தமிழ் என்ற பதத்திற்கே இனிமையென்ற பொருளிருக்க, மற்றவர்களைக் கெடுக்கும்படியான குணம் என்ன இருக்கின்றதோ ஈசுவரனுக்குத்தான் வெளிச்சம். பார்க்கப்போனால் திருவிளையாடற் புராணத்தில்,

"கடுக் கவின்பெறு கண்டனும் தென்றிசை நோக்கி
அடுக்க வந்துவந்து ஆடுவான் ஆடலின் இளைப்பு
விடுக்க வாரமென் கால்திரு முகத்திடை வீசி
மடுக்க வும்தமிழ் திருச்செவி மாந்தவும் அன்றே."

என்று சொன்ன பிரகாரம் ஈசுவரனுக்கே ஆனந்தத்தைக் கொடுத்த தமிழல்லவா நமது பாஷை. மேலும் அதே திருவிளையாடற் புராணத்தில்,

"தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும் முதலை
யுண்ட பாலனை யழைத்ததும் எலும்புபெண் ணுருவாகக்
கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததும் கன்னித்
தண்ட மிழ்ச்சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்."

என்று கேட்டிருப்பதற்குத் தமிழ் என்றல்லவோ விடையளிக்க வேண்டும். அப்படிப்பட்ட தமிழ்ப் பாஷையை, தமிழ்த் தேசத்திலே பிறந்து, தமிழ்த் தேசத்திலேயே வளர்ந்து, தமிழ்ப் பாஷையே பேசிவரும் நம் தமிழ்ப் பிள்ளைகளே ஈனம் செய்தால் நம் தாய்ப்பாஷை எப்படித்தான் முன்னுக்கு வருவது? முன்சொன்ன என் நண்பர் போன்றவர்களுக்கு,

பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினுமோர்
எல்லையருள் பரம்பொருள்முன் னிருந்தபடி இருப்பதுபோல்
கன்னடமும் களிதெலுங்கும் கவின்மலையா ளமுந்துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே ஒன்றுபல வாயிடினும்
ஆரியம்போல் உலகவழக் கழிந்தொழிந்து சிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே.

என்ற மனோன்மணியத் தமிழ் வணக்கக் கவியின் அர்த்தத்தைத் தெளிவுற மனதில் பதியும்படி செய்து, தமிழ் தெய்வத் தன்மை பொருந்திய தென்பதை விளங்க வைக்கவேண்டும்.

மேனாட்டு நாகரீகத்தின் கோலத்தினால் தலைமயிரைக் கத்தரித்துக் கொள்ளுவதும், மேனாட்டாரைப்போல் உடுப்பதும், சுருட்டுப் பிடிப்பதும், தெய்வத்தன்மை பொருந்திய தாய்த் தமிழைக் குறைத்துப் பேசுவ

தும் தவிர வேறொன்றும் ஏற்படவில்லை. அவர்கள் தங்கள் மட்டில் அலக்ஷியம் செய்துகொண்டிருந்தாலும் பாதகமில்லை. ஆவலுடன் கற்றுக்கொள்ள எத்தனிக்கும் அன்னிய பாஷைக்காரர்களைத் தடுக்காமலிருந்தால் போதுமென்று வேண்டும் ஸ்திதிக்கு இக்காலம் வந்துவிட்டதை நினைக்க மனதிற்கு நிரம்ப கஷ்டமாக இருக்கிறது. நமது தேசம் முழுவதும் தொழுது வணங்கும் மகாத்மா காந்தி யடிகள் தாம் ஒரு பெரிய பார்-அட்-லா (Bar-at-law) வாயிருந்தபோதிலும் தம் தாய்ப் பாஷையாகிய ஹிந்தியை விருத்தி செய்வதற்கும், பரவச் செய்வதற்கும் எடுத்துக்கொள்ளும் முயற்சி தேசாபிமானிகளனைவர்க்கும் தெரிந்த விஷயம். மேனாட்டாரைச் சாயல் பிடிக்கும் நம்நண்பர்கள் அவர்களுடைய சற்குணங்களைக் கவனிப்பதில்லை என்று 'நமதானந்தன்' பலமுறையும் வற்புறுத்தி யிருக்கின்றது. அவர்கள் எங்கே போனாலும் தங்களுடைய தேசத்தாரோடுதான் பழகுகிறார்கள். தங்கள் பாஷையைத்தான் பேசுகிறார்கள். தங்கள் பாஷையையே விருத்திசெய்து பரவச் செய்கிறார்கள். உதாரணம், நமது தேசத்தில் இங்கிலீஷ் பாஷை வேரூன்றி யிருப்பது ஒன்றே போதும். அவர்களைப் போல் நடந்து கொள்வதினால் தங்களுக்கு ஒரு கௌரவம் என்று நினைத்துக்கொண்டிருக்கும் கனவான்களைப்பற்றி மேனாட்டார் வெகு குறைவான அபிப்பிராயம் கொண்டிருக்கிறார்களென்பது அறிவாளிகளுக்கு வெளிப்படையாய்த் தோன்றும்.

ஆகையினால் கேவலம் வயிற்றுப் பிழைப்புக்காகவும், ராஜபாஷையாயிருப்பதனாலும் இங்கிலீஷ்ப் பாஷையைக் கற்றுக்கொள்ளவேண்டிய தவசியமே. அப்படி அதை வேண்டிய அளவு படித்துக்கொண்டு உண்மையில் எப்போதும் இன்பத்தைத் தருவது நம் தாய்ப்பாஷையாகிய தமிழ் அதையே விருத்திக்குக் கொண்டு வரவேண்டும் என்று ஒவ்வொருவரும் நினைக்க வேண்டும். ஆகையினால் முன்சொன்ன என் நண்பர் போன்றவர்களைத் திருத்தி உண்மையில் தமிழ் சிறந்த பாஷை யென்று வற்புறுத்தி, அதை நிலைக்க வைத்துச் செழித்தோங்குமாறு செய்யும் "ஆனந்தபோதினியும்" அதன் ஆசிரியரும் நீடூழிகாலம் வாழ வேண்டுமென்று கடவுளைப் பிரார்த்திக்கிறேன்.

T. S. ராஜகோபாலன்,
B. A., கிளாஸ், திருக்காட்டுப்பள்ளி.

---

## " இயற்கை யறிவும் பகுத்தறிவும். "

இவ்வுலகத்தில் நடக்கும் காரியங்கள் எவ்விதமாக மாறினாலும், மனிதர்கள் மற்ற பிராணிகளைவிட மேலானவர் என்பது ஒருக்காலும் மாறாது. ஆயினும் சில சமயங்களில் ஜீவராசிகளின் இயற்கை யறிவானது மனிதரது பகுத்தறிவைவிட மேலானதாகத் தோன்றுகிறது.

மனிதர்களுக்கும் மற்றுமுள்ள ஜீவராசிகளுக்கும் உள்ள வித்தியாசமென்ன வென்றால், மனிதருக்குப் பகுத்தறிவும், இயற்கை யறிவும், மிருகங்களுக்கு இயற்கையறிவு மாத்திரமும் இருப்பதுந்தான்.

ஒரு மனிதன் தானாக ஒன்றும் செய்ய முடியாது. அவனுக்கு ஆயுதங்கள் தேவை. மிருகங்களுக்கோ வெனின், கடவுள் கொடுத்த கை கால்களே போதுமான ஆயுதங்கள். கலப்பை யில்லாமல் மனிதன் நிலத்தைச் சீர் திருத்தி, உழுது, பிறகு விதைத்து, கத்தியில்லாமல் பலனை அறுத்து, வேண்டிய காரியங்களைச் செய்து ஜீவனம் செய்ய முடியாது. ஆனால் பறவைகளுக்கும், மற்றவற்றிற்கும் காட்டில் கிடைக்கும் காய்கனிக ளாகாரம். மற்றம் மனிதன் தான் செய்யும் காரியங்களில் சில தவறுகள் செய்யக் கூடும். ஆனால், மற்ற மிருகங்கள் அவ்வாறில்லை. நாம் எப்பொழுதாவது ஒரு பக்ஷி கூடுகட்டத் தெரியாமல் ஒரு மரத்தின்மீ துட்கார்ந்து விசனிப்பதைப் பார்த்திருக்கிறோமா ? தேனீக்கள் தங்கள் சிறு அறைகளை வெவ்வேறு உருவமுடையனவாய்க் கட்டுகின்றனவா ? மிருகங்களுக்கு நோய் வந்தால் மற்ற மிருகங்களுக்குத் தொந்தரை கொடுப்பதில்லை. தாமே ஏதோ புல் பூண்டைத் தேடித் தின்று சௌக்கியமடைகின்றன. மனிதருக்கு நோய் வந்தாலோ, அநேகருக்குத் தொந்தர வுண்டாகிறது. இன்னும் தப்புகள் செய்துதான் கடைசியில் ஒருவிதமான நல்ல ஸ்திதிக்கு அவர்கள் வரக்கூடும். மிருகங்களோ கால வித்தியாசத்தினால் மாறுதல்களடைவதில்லை. ஆனால், மனிதரது புத்தியும், சாதுர்யமும் அவர்களை நிமிஷத்திற்கு நிமிஷம் வேறாக்கி விடுகின்றன. தங்கள் தங்கள் காரியங்களுக்கு மிருகங்கள் இயற்கையறிவையும், மனிதர் செயற்கை யறிவையும் உபயோகப்படுத்த வேண்டியிருக்கிறது. மனிதரது செயல்களோ நிமிஷத்திற்கு நிமிஷம் மாறுகின்றன. ஆனால் ஒரு பக்ஷியின் கூடோ நூறு வருஷத்திற்குமுன் அதன் இனத்துப் பக்ஷிகள் கட்டிய கூட்டைப் போலவேயிருக்கும். இம்மூன்று காரணங்களால் பகுத்தறிவு இருப்பதற்கும் இல்லாததற்கும் வித்தியாசம் சிறிது விளங்கும். மிருகங்களின் பகுத்தறிவில் யாதொரு ஒற்றுமையும், ஆராய்ந்து பார்க்குந்தன்மையும் கிடையாது. ஆனால் அது சில சமயங்களில் வெளித் தோற்றத்திற்காவது பகுத்தறிவாகத் தோன்றும். ஒரு தேனீயானது சில புஷ்பங்களினின்று மாத்திரம் தேனைச் சேகரிக்கின்றது; புதிதாய் வந்த ஆட்டுக்குட்டி கூட இது பால், இது பாலல்ல என்பதைக் கண்டு பிடிக்கும் சக்தியுடையதாய் இருக்கிறது. ஒரு ஆமை கடலினின்று எடுத்துக்கொண்டுபோய் வேறு இடத்தில் விடப்பட்டால், அது திரும்பவும் தண்ணீருள்ள இடத்திற்கே செல்லும். இவ்வித குணம் மிருகங்களினிடம் இருக்கும் வரை அது இயற்கையறிவு; மனிதரிடம் இருந்தால் பகுத்தறிவு.

இயற்கையறிவு சமயத்துக் கேற்றபடி மாறுவதில்லை என்று தற்காலப் பரீக்ஷைகள் கூட நிரூபிக்க முடியவில்லை. ஆனால் மாறுகிறது என்பதை நாம் கண்கூடாக் காணலாம். நாம் வழக்கமாய்க்கூறும் "பச்சோந்தி" என்ற ஒருவகை ஓணான் மரத்தின்மே லிருக்கும்போது பசுமையாய் இருப்பதையும், நிலத்தில் வந்தால் அந்நிலத்தின் வர்ண முடையதாய் இருப்பதையும் நாம் பார்க்கிறோம். தேனீக்கள் மேசை முதலியவற்றின்மேல் கட்டும் கூடுகளை சாய்வாகக் கட்டுகின்றன வென்று கூறுகின்றனர் பலர். இது இயற்கை யறிவாயினும் செயற்கை யறிவிற்கு ஒப்பிடத்தக்கது. காசி முதலிய இடங்களில் குரங்குகள் வழிப் பிரயாணிகளின் வஸ்துக்களை எடு

த்து வைத்துக்கொண்டு, அவர் ஏதாவது தீனி கொடுத்தால்தான் அவற்றைத் திருப்பிக் கொடுக்கின்றனவாம்.

எறும்புகள் எவ்வளவு சிறியவை யாயினும், மெச்சத்தக்க காரியங்களைச் செய்கின்றன. அவை தங்களுடைய இனத்தாரை அதிசீக்கிரம் கண்டு பிடித்துக் கொள்கின்றன. அவை எப்பொழுதும் சுறசுறுப்பாகவே இருப்பது மல்லாமல் வேலையைச் சுலபவழியில் திருப்பிக்கொள்கின்றன. உதாரணமாக,ஒரு மேலிடத்திலிருந்து கீழிடத்திற்குத் தீனியைக்கொண்டு வர வேண்டுமானல் அவ்வுயர்ந்த இடத்தினின்று கீழே போட்டுவிட்டு, அங்கே யிருக்கும் எறும்புகளை எடுத்துச் செல்லச் செய்கின்றன. வெள்ளம் வந்து தங்கள் புற்றுகளில் தண்ணீர் நிறைந்துவிட்டால், எல்லாம் ஒரு பந்துபோலத் திரண்டு வெள்ளத்தில் அடிக்கப்பட்டுக் கொண்டுபோய் வேறு இடத்தில் சேர்க்கப்பட்டவுடனே பிரிந்து விடுகின்றன.

சிலந்தி தன்னுடைய கூட்டை வலைபோல அமைப்பதற்கும், மற்றப் பூச்சிகள் அதிற்சிக்கித் தத்தளித்து ஓய்ந்து போன பிறகே அவைகளைத் தின்பதற்குச் செல்வதிலும், காரணங்களிருக்கின்றன. தன் கூட்டிற் சிக்கிய பூச்சிகள் "குளவி" முதலியவற்றைப் போல் கொடியதாயிருப்பின் தன் உயிரைப் பாதுகாத்துக் கொள்வதற்கே சிறிது நேரங்கழித்துச் செல்கின்றது.

சரியான கண்ணில்லாத சிறு ஊர்வனவற்றிற்குத்தக்க வலிய, விரைவாக ஓடக்கூடிய கால்களையும், நுட்பமான கண்ணுடைய வற்றிற்கு பெரிய கால்களையும்; எல்லாப்பிராணிகளுக்கும் நன்மையையே யுண்டாக்கக்கூடிய ஒரு கருத்தோடு ஏற்படுத்தியுள்ள எல்லாம் வல்ல ஜகதீசனது ஞானமே ஞானம்!

மனிதருக்கு இவ்வுலகிலுள்ள ஆசைகளுக்குக் கணக்கே யில்லை. ஆனல் மிருகங்களுக்கும் பக்ஷிகளுக்கும் தங்களைப் போஷிப்பதும், தங்களுடைய இனத்தை விருத்தி செய்வதுமாகிய இரண்டேதான் உளது. இதுதான் இவற்றின் இயற்கையறிவின் சிறுமைக்குக் காரணம்.

ஒரு காகமானது, கோழியினல் மற்ற காக்கைகளுக்குத் தெரியாமல் வளர்க்கப்பட்ட போதிலும், அதுகட்டும் கூடு மற்ற காகங்கள் கட்டும் கூடுகளைப் போலவேதா னிருக்கும்.

மற்றும் பக்ஷிகள் வைக்கும் முட்டைகளினின்று குஞ்சுகள் வெளிவரும் காலமும், மரங்கள் துளிர்த்துப் புழுபூச்சிகள் நிறைந்திருக்கும் காலமும் ஏறக்குறைய சரியாயிருக்கும். அவை இவ்வாறு இருக்கும்படி யோசித்துத்தான் அல்லது பார்த்துத்தான் முட்டை யிடுகின்றன. ஒரு பெட்டைக்கோழியானது அடைகாக்கும்பொழுது ஒவ்வொருபுறமும் முட்டைகளைத்திருப்பி அவற்றிற்குச் சரியாக உஷ்ணம் படச்செய்து வெகுஜாக்கிரதையாக இருக்கிறது. அது மழைகாலத்தில் சிறிதுநேரமும், வெயிற்காலத்தில்கொஞ்சம் அதிகநேரமும் வெளியே செல்கின்றது. ஏனெனில், மழைக்காலத்தில் சீக்கிரம் முட்டைகள் குளிர்ந்து போகும் உஷ்ணகாலத்தில் அப்படியிராது. ஆனல் முதலிலேயே சொல்லியபடி மந்தபுத்தியையுடையதா யிருப்பதால் ஒரு குறைவிருக்கிறது. இது மனிதருக்கும்

வாத்துக்களுக்கும் அனுகூலமா யிருக்கிறது. எவ்வாறெனில், மனிதர்கள் முட்டையை எடுத்துவிட்டு, அவற்றினிடத்தில் வேறே வஸ்துக்களை வைத்துவிட்டபோதிலும் ஏமாந்துபோய் அவைகளைத் தன் முட்டைகளென்று நினைத்து அடைகாக்கின்றது. வாத்துக்களின் முட்டைகளைத் தன் முட்டைகளென்று நினைத்து அவற்றிலிருந்துண்டாகும் குஞ்சுகள் தண்ணீரில் இறங்கும்போதுதான் அறிந்துகொள்கிறது.

நீர்நாய்கள் நீரோட்டத்திற்குத் தக்கபடி ஆறுகளில் வீட்டைக்கட்டி வசிக்கின்ற விதமும், அவைகளைச் சீர்திருத்தும் திறமையும் மெச்சத்தக்கவை. அவை தங்கள் பற்களாலேயே வீட்டைக் கட்டுவதற்கு மரங்களை அறுக்கின்றன.

யானைகள் தங்களுக்குச் செய்யப்பட்ட நன்மைக்கு நன்மையும், தீமைக்குத் தீமையும் செய்கின்றன; இது அவற்றின் இயற்கைக்குணம். அவைகளின் தந்திரமும் மனிதருக்காக வேலைசெய்வதும், பழக்கப்படக்கூடிய குணமும் இயற்கை குணத்திற்குச் சிறிது மாறுபடுகின்றன.

பக்ஷிகள் தங்களுடைய முட்டைகளை அதி ஜாக்கிரதையாய்ப் பாதுகாப்பதுபோல் சிங்கம், முதலிய காட்டுமிருகங்கள் தங்கள் குட்டிகளை வெகு ஜாக்கிரதையாகவே பார்த்து வருகின்றன. சில ஜந்துக்கள் தங்கள் முட்டைகளையாவது குட்டிகளையாவது கவனிப்பதில்லை. சிங்கமானது எப்பொழுதும் குட்டியை விட்டுப் பிரியாதிருப்பது ஏனெனில், அது ஒரு தடவைக்கு ஒன்றோ அல்லது இரண்டோ குட்டிகள்தான் போடுகின்றது. இவைகள் தான் இனத்தை விருத்தியாக்க வேண்டும். ஆகையால்தான் சிங்கம் அவ்வளவு கவலையெடுத்துக் கொள்கிறது. ஆனால் லக்ஷக்கணக்கான சிறுமுட்டைகளை யிடும் மீனோ அவற்றைக் கவனிப்பதேயில்லை. ஏனெனில், குறைந்த பக்ஷம் அந்த லக்ஷத்தில் பத்துகுட்டிகளாவது மீந்திருக்கும். அப்படி யில்லாமல் எல்லாம் குட்டிகளானாலும் மற்றப் பெரிய மீன்கள் அவற்றைத் தின்று விடுகின்றன. மற்றும் பாம்பு, முதலை, தீப்பறவை முட்டைகளை நிலத்திற்குள் மறைத்து வைக்கின்றன அவைகளில் ஒன்று காணமற் போனாலும் அறிந்துகொண்டு மற்றவற்றை விட்டு விட்டுப்போய் விடுகின்றன.

ஒரு மிருகமாவது, பக்ஷியாவது தன் குட்டி அல்லது குஞ்சு தன்னுடைய ஆதீனத்தில் இருக்கும்வரை அதை மிகவும் கடூரமாய்ப் பாதுகாக்கிறது. அதாவது, மற்றவர்களிடத்தில் அச்சமயங்களில் கடூரமாயிருக்கும். ஆனால் இது சின்னாட்கள் வரைதான். நமக்கிருப்பதுபோல் மற்ற ஜந்துக்களுக்கும் பாஷை, ஜாதி, ராஜாங்கம் முதலியவை யிருக்கின்றன.

இவ்வுபமானங்களினின்று சில விடங்களில் மிருகங்களின் இயற்கையறிவானது மனிதரது பகுத்தறிவைவிட மேலானது என்பது "உள்ளங்கை நெல்லிக்கனி" போல் விளங்கும்.

C. P. சுந்தரராம்,

ஸ்ரீகிருஷ்ணர் வாசகசாலை, கோயமுத்தூர்.

# கைவல்ய நவநீதவசனம்

(229-ம் பக்கத்தொடர்ச்சி.)

(இனி மேற்கண்டவாறு மூன்று குணங்களையுடைய மனம் எவ்வாறு ஒடுங்கிச் சமாதிநிலையை யடையுமென்பதைப் பற்றிக் கூறப்படுகிறது.)

மேலே கூறப்பட்ட சத்துவம், இராஜசு, தமசு என்ற மூன்று குணங்களில் சத்துவகுணமே மனதின் இயற்கையான குணம். மற்ற இராஜோதமோ குணங்கள் இடையில்வந்து சேர்ந்தவை. எப்போதும் இயற்கையாயுள்ள குணமே நிலையாகவிருக்கும். இடையில் வந்துசேர்ந்த குணங்களை நீக்கினால் அவை நீங்கிவிடும். சத்துவகுணத்தை விடாது பற்றியிருந்தால் இராஜோதமோ குணங்கள் நசித்துப்போம். உள்ளமே மனதின் சத்துவ குணபாகம். இராஜோதமோ குணங்கள் நசித்ததே சத்துவகுணமாகிய உள்ளம் களங்கமற்ற ஆகாயம்போல் சலனமின்றி அதிசூக்கும நிலையை யடையும். ஆகவே அவ்வாறே சலனமற்றதும் அதிசூக்கும மானதுமாகிய பிரம்மத்தில் கலந்து ஏகமாகி நிர்விகல்ப நிலையைத் தானே யடையும்.

[இராஜோகுணம் சலனத்திற்குக் காரணமாக வுள்ளது. தமோகுணம் ஸ்தூல பதார்த்தங்களை யுணர்தற்குக் காரணமாக வுள்ளது. இச்சை, கோபம், அகங்காரம், சோம்பல், நித்திரை, துக்கம், சந்தோஷம் யாவும் இந்த இரண்டு குணங்களையும் சேர்ந்தனவே. இந்தக்குணங்கள் இடையில் வந்து கலந்தனவாதலின் தாமே வந்து தாமே நீங்கிவிடும். ஒருபோதும் நிலையாய் நிற்கமாட்டா. திருட்டாந்தமாக ஒரு மனிதனை யின்னொரு மனிதன் துர்மொழிகளால் வையும்போது அம்மனிதன் அடங்காக் கோபமுடையவனாகிறான். அச்சமயம் அவனை நோக்கி "அப்பா இன்னும் அரைமணி நேரம் இக்கோபத்தை யிந்தத் தீட்சணிய நிலையிலேயே வைத்துக்கொண்டிரு" என்றால் அவனால் முடியுமோ? ஒருபோதும் முடியாது. அக்கோபம் அந்த விநாடி முதலே கொஞ்சங் கொஞ்சமாகத் தணியத் தொடங்கும். இவ்வாறே நமக்குண்டாகும் சந்தோஷம், துயரம் யாவும் எந்தச் சந்தோஷமும் வரவரக்குறைந்துபோம். "அப்பா! இதைச் சகித்துக்கொண்டு இனி யெப்படி உயிர் வைத்துக்கொண் டிருக்கப்போகிறோம்" என்ற துயரமும் காலம் கழியக் கழியக் குறைந்து பிறகு மறந்தேபோம். இவற்றை நிறுத்தி வைத்துக் கொண்டிருக்க முடியாது. ஏனெனில், இவை நம் சுபாவ குணமல்ல.

சத்துவகுணம் சலனமற்ற சாந்தகுணம். ஒருவன் விரும்பினால் அதை விடாமல் பற்றியிருக்கலாம். ஒருவனுக்கு "பத்து ரூபாய் கொடுக்கிறேன். இன்று முழுமையும் யார் என்ன வையினும் கோபியாதே" என்றால் சாந்தமாகவே யிருப்பான். இலக்ஷ ரூபாய் கொடுப்பதாயினும் கோபத்தையோ துயரத்தையோ, வரும்படி செய்யவோ நிலையாக வைத்திருக்கவோ முடியாது. சாந்தமாகிய சத்துவகுணமே மனதின் சுபாவகுணமாதலின் அதனை விடாது பற்றியிருக்கக் கூடும்.

சூரியனுடைய கிரணங்கள் சாதாரணமாக எங்கும் சிதறிப்பரவியிருக்கின்றன. இதனால் அவை நம்மேல் படினும் நாம் சகித்துக்கொண்டிருக்கிறோம். எந்தவஸ்துக்கள்மேல் படினும் அவை எரிந்தழியாதிருக்கின்றன. கொஞ்சம் பஞ்சைத் தரையில் வைத்து அதற்குமேல் சற்று தூரத்தில் புறக்குவிவான ஒரு கண்ணாடியை, அதாவது நடுமையம் அதிக கனமாகவும், சுற்றுப்பக்கம் ஓரங்களில் போகப்போக சரிவாகப்போய் முடி

வில் குறைந்த கனமாகவும் இருக்கும் கண்ணாடியை (convex glass) ப்பிடித்தால் அதில் பிரவேசிக்கும் சூரியக் கிரணங்கள் கீழே செல்லும்போது யாவும் கண்ணாடியின் நடுமையத்திற்கு நேர் ஒரேவிடத்தில் சேர்கின்றன. அக்கிரணங்களை யவ்வாறு ஒரே விடத்தில் சேர்க்கும் சக்தி அத்தகைய கண்ணாடிக் கிருக்கிறது. பரவியிருந்தபோது ஒரு கெடுதியும் செய்யமுடியாத அக்கிரணங்கள் அவ்வாறு ஒன்றாய்க் கூடியதும் அந்தவிடத்திலுள்ள பஞ்சை யுடனே எரியச் செய்யும். தேகத்தின் மேல்பட்டாலும் தீயைப் போலவே சுடும்.

இது போன்றே மனதின் வல்லமை சாதாரணமாய்ச் சதா சலிக்கும் குணமும், விஷயங்களைப்பற்றும் குணமுமாகிய இராஜோதமோகுணங்களாகப் பரவியிருக்கிறது. நிர்ச்சலனமான சத்துவகுணத்தில் அவ்வல்லமை ஒரே இடத்தில் சேர்வதால் மனம் அபார சக்தியுடைய தாகிறது. அதனால் ஏகாக்ர சித்தமுடையோர் பல அரிய அதிசயமான காரியங்களைச் செய்கிறார்கள். முடிவில் அவ்வல்லமை மாயை யெனுந் திரையை நீக்கிப் பரம்பொருளை யறியவும் செய்கிறது.

மூன்று குணங்களில் ஒன்று மேலெழும்போது மற்றை யிரண்டும் தாழ்ந்தடங்கும் என்பதற்கு,

"வாழுஞ் சத்துவ மற்றையவ் விரண்டையு மறைத்துத்
தாழு மற்றையவ் விரண்டுமத் தமோகுணந் தழைப்பின்
வீழுஞ் சத்துவந் தமங்களவ் விரசதம் விளைவி
னூழின் மற்றிவை யிரண்டுந்தாழ்ந் தொன்றுமிக் குளவாம்"

(வாசிட்டம்)

(சத்துவகுண மாத்திரமாகச் சேடித்த மனமாகிய உள்ளம் பிரம்மத்தோடு கலந்து ஏகமாக நிற்ப தெவ்வாறெனத் திருட்டாந்தத்தோடு கூறுகிறார்.)

சற்றும் மாசில்லாத ஒரு கண்ணாடியை யின்னொரு மாசற்ற கண்ணாடியின் முன் காட்டும்போது, இக்கண்ணாடியும் அதே மயமாய் நிர்மலமாய் அபேதமாய் நிர்விகற்பமாய்த் தோன்றும். அதுபோல், பிரம்மத்தைப் போல் நிர்மலமாகவும், மாசற்றதாகவும், சாந்தமானதாகவும் உள்ள உனதுள்ளம், அகண்ட சொரூபமாயும், சத்தாயும், சித்தாயும், ஆனந்தமாகியுமுள்ள அப்பிரம்மத்தில் ஐக்கியமடைந்து தெளிந்த நிலையில் நின்றால் உலகத்தோற்றமேது சலனமேது என்றுணர்ந்து சந்தேகந் தீர்வாய்.

இப்போது கூறியவற்றால் சலனமின்றிக் களங்கமற்றதாய் விளங்கும் உள்ளமே அறிவென்பதும், ஆன்மாவென்பதுமாம் என்று விளங்கும். இந்த ஆன்மா சாக்ஷிமாத்திரமா யுள்ளது.

"சாந்தமே தற்சாட்சி தற்சாட்சி யேபிரமம்
போந்த பிரமமே பூரணமா—மாய்ந்துணர்ந்த
சுத்தபரி பூரணமே தோன்றாச் சுவானுபவஞ்
சித்தநிலை தானே சிவம்."

(சொரூபசாரம்.)

இந்த ஆன்மாவும் பிரம்மமும் ஒரே இலட்சணமுடையவை யாதலின் இவை யிரண்டும் அபேதமாய் ஏகரசமாய்க் கலந்தொன்றாகும். ஆன்ம பர

மான்மாக்களில் பேதம் கற்பிப்பவன் இரௌரவாதி நரகத்தை யடைவான் என்பது பிரமாணம். இவற்றுக்குள்ளபேதம் கடாகாயம் மகாகாயம் போல் சிறிது பெரிது என்ற அளவுபேதமேயன்றிச் சொரூப பேதமில்லை.

"கடமடமா முபாதிகளை நேதி செய்யிற்
கடவானு மடவானு மொன்றே போல
மடமைமுத லுபாதிகளை நேதி செய்யின்
மாசற்ற வான்மாவும் பரமு மொன்றே
யிடமருவும் வேதாந்த விசாரத் தாலே
யிருமைதரு முபாதியெலா நேதி பண்ணித்
தடமருவு மான்மபர வைக்கி யத்தைத்
தடையறவே முமூட்சுவெலா முணர வேண்டும்."
(ஈசுரகீதை.)

["களங்கமற்ற ஆகாயம்போல் சலனமின்றியிருக்கும் உள்ளமானது அதே விதமாக வுள்ள பிரம்மத்தில் எகரசமாய்த் தானே நிற்கும்" என்று மேலே கூறப்பட்டதில், சத்துவ குண மாத்திரமாய்த் தத் சொரூப நிலையை யடைந்த உள்ளம் தற்போத விழப்பில் ஐக்கிய நிலையடைவதே யன்றி, போத வுணர்ச்சியோடு எதிரிட்டு நோக்கி யொன்றில் கலப்பதில்லை; இதனுற்றான் உள்ளம் தானே அந்நிலையில் நிற்கும் என்றார். தற்போதம் தோன்றிய விடத்து அந்நிலை உண்மை நிலையன்றாம். ஏனெனில், உண்மை நிலை உண்டென்றும் இல்லையென்றும், ஒன்றென்றும் இரண்டென்றும் உணரவொண்ணு நிலையாதலின். தற்போத வொழிவில்தான் இன்பம் என்பதற்கு:—

"தன்மையும் முன்னிலையும் தானுய்ப் படர்க்கையுமா
யென்னுெழிவி லின்புமா யின்புமிது—வென்னுத
வேதாந்த சித்தாந்த மேபிறவா வீடென்று
ஞேதாமல் வேதமுணர்ந் தோன்" (ஒழிவிலொடுக்கம்)

"எம்மதத் தோரெவ் வகைநிட்டை சொல்லினுஞ்
சம்மத மேயெமக் குந்தீ பற
தற்போத மாய்க்குமே லுந்தீ பற" (திரு உந்தியார்)

தற்போதம் தோன்றியவிடத்து அந்நிலை யுண்மையன்றாம் என்பதற்கு:—

"போதம் பதைப்பறவே பூரணமாம் பூரணமும்
போதம் பதைத்தளவே பொய்யாகு—மீது
விழித்திமைப்பர் கின்றால் வெளியசைந்தாற் காற்றாம்
பழக்கமதைச் சாட்சியைப்போற் பார்." (ஒழிவிலொடுக்கம்.)

அகண்டாகார சொரூபத்தில் தன்னை யிழத்தலே நிலையாகும். சிவம் ஆன்மாவை விழுங்கித் தான் தானுகப் பிரகாசிக்கும் என்பது ஆன்றோர் வாக்கு. இதனால் பரமேசனுக்கு உயிருண்ணி யென்றும் ஒரு நாமமுண்டு.

"ஆனு வமுதே யயில்வே லரசே
ஞானு கரனே நவிலத் தகுமோ

யாஞகிய வென்னை விழுங்கி வெறுந்
தானய் நிலைநின் றதுதற் பரனே" (கந்தானுபூதி)

"இல்லையில்லை யென்னிஞென்று மில்லா தல்ல
* * * * *

"அல்லையுண்ட பகல்போல வவித்தை யெல்லா
மடையவுண்டு தடையறவுன் னறிவைத் தானே
வெல்லவுண்டிங் குன்னையுந்தா ஞகக் கொண்டு
வேதகமாய்ப் பேசாமை விளங்குந் தானே" என்றும்,

"ஓராம லேயொருகா லுன்னும லுள்ளொளியைப்
பாராம லுள்ளபடி பார்த்திருந்தால்—வாராதோ
பத்துத் திசையும் பரந்தெழுந்தா னந்தவெள்ளந்
தத்திக் கரைபுரண்டு தான்" என்றும்,

தாயுமானவர் அருளியவை இச் சந்தர்ப்பத்தில் சிந்திக்கத்தக்கன.

ஐக்கிய நிலையில் தான் அதுவாதலன்றி முன்னிலைச் சுட்டில்லாததால் எதிரிட்டறிய வொன்றுமில்லை. தற்போத மற்ற விடமாதலின் அது இது வென்று கூற எதுவில்லை.

"ஊமைகண்ட சொப்பனம்போன் றுள்ளே யறிவதன்றி
நாமிதெனச் சொற்றிடவு நண்ணுமோ—தாமதம்போ
லாங்கதுவாய்ப் போவதலா லன்றிதா மென்றுரைக்க
வீங்கொருவ ருண்டோ விசை.

ஒன்றென் றிரண்டென்று மொன்றிரண்டே யாமென்று
மென்ருேநீ முத்திதனி லேய்ந்திடுவா—யொன்றென்று
சொல்லு மறிவைத் துரியாதீ தம்விழுங்கிற்
சொல்லுமவ னெங்குற்ருன் சொல்."

(வள்ளலார் - சிவஞானப்பிரகாச வெண்பா.)

அந்த ஞானநிலையில் மனச்சலனமில்லை யாதலின் பிரபஞ்சத் தோற் றரவு கனவுபோல் அனுபவமாகத் தோன்றும்; அதற்கு ஐயமில்லை என்ப தாம்.]

(மேலே கூறப்பட்ட விஷயங்களால் சமாதி நிலையிலிருக்கும் ஜீவன் முத்தர் மன மிறந்தோர் என்று தெரிகிறது. சீவன் முத்தரும் பிராரப்த போகத்தைப் புசிக்கவேண்டுமே, மனமின்றி எப்படி போகங் கூடும் எனச் சந்தேகங்கொண்டு சீடன் வினவுகிருன்)

"பரமாசாரியரே! சீவன் முத்தர்களுடைய மனம் பிரம்மத்தோடி ரண்டறக் கலப்பதாகிய சமாதியில் நாசமாய் விட்டால், அவர்கள் பிரா ரப்த போகத்தை எப்படி யனுபவிப்பார்கள்? சீவன் முத்தரும் தேகமுள் ளளவும் பிராரப்தத்தைப் புசித்தே தீரவேண்டுமென்பது விதியன்ருே? மனமில்லாமல் எப்படிப் போகத்தைப் புசிப்பார்கள். மனம் தோன்றியே புசிக்கிருர்க ளென்ருல், அவர்கள் மனம் நசிக்கவில்லையே; அப்போது அவர்

களைச் சீவன் முத்தரென்று எப்படிக் கூறுவது ? இச்சந்தேகத்தை நிவர்த்திசெய்தருளவேண்டும்" என்று சீடன் பிரார்த்தித்தான்.

ஆசான்:—"மனம் சத்துவம், இராஜசு, தமசு என்ற முக்குணங்களையுடையதென முன்னம் கூறினோமல்லவா. இவற்றில் சத்துவகுண மாத்திரமாய்ச் சேஷித்திருப்பது மனதின் அருவபாகம் எனப்படும். இதற்கு அருவமனம் என்று பெயர். இராஜோ தமோ குணங்கள் மனதின் உருவ பாகமாகும். இதற்கு உருவமனம் என்று பெயர். இந்த இருவகைகளில் சீவன் முத்தரிடம் உருவமனம் மட்டுமே நாசமடைந்திருக்கும். சத்துவ பாகமாகிய அருவமனம் விதேக முத்தியில்தான் நாசமடையும்.

களங்கமற்ற சத்துவமே மனதின் உண்மைச் சொரூபமாகும். சலனமும் அஞ்ஞானமும்பொருந்திய இரசோதமோகுணங்கள் நீங்கினால், மாயையாகிய மனம் என்பது ஒழிந்ததே யாகும். ஞானமயமாகிய சத்துவமனம் மட்டுமேயுடைய சீவன்முத்தர் சாக்ஷி மாத்திரமாக விருப்போராதலின், நிகழ்காலத்தில் நேரிட்ட பிராரப்த போகத்தைப் புசிப்பார்கள். இறந்த காலத்தில் கழிந்தவற்றையும், எதிர் காலத்தில் வரக்கூடியவற்றையும் நினைத்து மகிழ்ச்சியேனும் துயரமேனும் அடையார். "நான் இதைச் செய்கிறேன், அதைச் செய்தேன்" என்னும் அகம் பாவத்தை விட்டு அகர்த்தாவாய், அந்தக் கரணாதி செயல்களையும் அவஸ்தாத்திரியங்களையும் காணும் சாக்ஷிமாத்திரமாகி ஜீவன்முத்தராய் இருக்கலாகும்; பிராரப்த போகத்தைப் புசிக்கவுங் கூடும். இதற்கு யாதொரு தடையுமில்லை யென்றறிந்து சங்கையை யொழிப்பாய்." என்றார்.

சீடன்:—"தேசிகோத்தமரே! சீவன் முத்தன் விவகாரங்களைச் செய்துகொண்டே சமாதி நிலையி லிருப்பதெனின் அது கூடாத காரியமல்லவா? உலக விவகாரங்களைச் செய்யின் ஏகாக்கிரசித்தம் (மனதின் சலன மற்ற நிலைமை) கலைந்து விடுமல்லவா ? அதனால் பிரம்மான்ம அனுபவமாகிய சமாதிநிலை நீங்கிவிடு மன்றோ ? இக்கலக்கத்தை நிவர்த்திசெய்ய வேண்டுகிறேன்" என்றான்.

ஆசான்:—குழந்தாய்! சீவன் முத்தன் உலக விவகாரங்களைச் செய்துகொண் டிருக்கினும் ஆன்ம சொரூபமாகிய தன் சாக்ஷி நிலையை விடாமலே யிருக்கக் கூடும். எதுபோலெனின், ஒரு அன்னிய புருடன்மேல் காதல்கொண்டு அவனைச் சேர்ந்து இன்ப மனுபவித்த ஒரு மாது தன் மனையில் தன் கணவனுக்குத் தேவப் பூஜாகாலத்தில் தொண்டு செய்யும் போதும் தன் சோர நாயகனிட மனுபவித்த சுகத்தை மறவாமல் மனதில் அதைச் சிந்தித்துக்கொண்டே யிருப்பாளன்றோ; அதுபோல் ஜீவன் முத்தனும் தன் நிலையை மறவான்.

"காதி விளையாடி யிருகை வீசினும் தாதிமனம் நீர்க்குடத்தே தான்" என்று பட்டினத்தடிக ளருளியதும் இதற்குத் திருட்டாந்தமாகும்.

[பிரபல நூலாகிய வாசிட்டத்திலும் மேலே கூறப்பட்ட திருட்டாந்தமே இந்த விஷயத்தில் கூறப்பட்டுள்ளது. ஜீவன் முத்தன் உலக் காரியங்களைச் செய்துகொண்டே சமாதி நிலையிலு மிருக்கலாகும். தாயுமானவர் "கொந்தவிழ் மலர்ச்சோலை நன்னீழல் வைகினும்" என்று தொடங்கி

"சந்ததமு நின்னருளை மறவா வரந்தந்து தமியேனை ரட்சைபுரிவாய்——சர்வ பரிபூரண வகண்டதத் துவமான சச்சிதா னந்த சிவமே" என்று முடிக்கும் பாசுரத்தில் கூறியது ஈண்டு சிந்திக்கத்தக்கது.

அவ்வாறு தொழில் செய்யும் ஜீவன் முத்தன், நான் செய்கிறேன் என்ற அபிமானமின்றி சாக்ஷி மாத்திரமாய் அந்நியர் தொழிலைச் செய்பவன் போன்றே செய்யலாகும். சாதாரண மனிதன் பல அவதானங்களை யேககாலத்தில் செய்யும்போது ஜீவன் முத்தன் தன் நிலையில் நின்றபடி உலக விவகாரங்களைச் செய்வது அவனுக்கு அதிக கஷ்டமாகாது. ஜீவன் முத்தனுடைய இந்த நிலை ஒரு அகன்ற ஏரியின் கரைமேல் நிற்கும் ஒருவன் நிலைமையைப் போன்றது. ஏரியின் கரைமேல் நிற்கும் மனிதன் ஏரியின் உட்பக்கம் நோக்கும்போது அகண்டாகாரமானதும், விகாரமற்றதும், ஏகமயமானதும், பிரிவற்றதுமான பிரகாசம் பொருந்திய நீர் நிலையைக் காண்கிறான். அவனே அதைவிட்டு ஏரியின் வெளிப்பக்கம் நோக்கும்போது பல விகாரங்களும் பல சொரூபங்களுமாகிய பலவித வீடுகள், பலவித மரங்கள், செடிகள், பலவித மிருகங்கள், அவற்றின் சலனங்கள் ஆகிய இவற்றைக் காண்கிறான்.

இதுபோன்றே, ஜீவன் முத்தன் அந்தர் முகத்தில் நோக்கும்போது களங்கமற்றதும், சலன மற்றதும், முன்னிலையற்றதும், ஏகமயமானதும், அகண்டாகார மானதுமாகிய ஆன்ம சாக்ஷாத்காரத்தை யடைகிறான். பகிர் முகத்தில் நோக்கும்போது நாமரூபமான நானா விடயங்களைக் காண்கிறான்.

ஒருவன் ஏககாலத்தில் இரண்டு காரியங்களைச் செய்வதாயின் அவையிரண்டையும் சரிவரச்செய்வது கஷ்டமே. உலக விவகாரங்களைச் செய்யும் ஜீவன் முத்தனுக்கு எதிலும் தாக்கற்று சாக்ஷி மாத்திரமாக விருப்பதே தன் சுபாவநிலையாகத் தோன்றி விடுகிறது. அஞ்ஞான நிலையிலுள்ள ஒருவனுக்கு எதையும் தான் செய்வதாகிய அகம்பாவம் எப்படிச் சுபாவமாகத் தோன்றுகிறதோ, அதுபோன்றே ஜீவன்முத்தனுக்கும் யாவும் தனக்கன்னியமாகக் காணும் தாக்கற்ற நிலை சுபாவமாகத் தோன்றுகிறது. ஆகவே அவன் தான் செய்யுங்காரியங்களை மனப்பற்றின்றி ஒருபலனையும் கருதாது செய்கிறான். அவ்வாறு சாக்ஷிமாத்திரமாக விருந்து செய்வதால் எதுவும் மனதிற்றாக்காமல் நழுவிப்போம். ஆதலின் அவனுடைய உலக காரியங்கள் ஒழுங்காய் நடைபெறுவது கஷ்டமேயாகும். ஆயினும் அவன் அகப்பற்றொழிந்தவ னாதலின் அதனால் சலனமடையான்.]

(தொடரும்)

சீடன்.

---

## தமிழின் பெருமையும், தற்கால நிலைமையும்

(129-ம் பக்கத் தொடர்ச்சி)

இனிமை:—இனிமை யென்றனனே அஃதை நிரூபிக்க ஓர் செய்யுள் இயம்பினும் போதும்; ஆனால் நான் மிகவுரைக்க விரும்பி யெழுதப்புகுகின்றனன். இஃது சாத்மீகத் தன்மையுடைய தாகையால் நயமான

சொற்களே நிரம்பப் பெற்றிருக்கும். உதாரணமாக, புண்ணியத் தலமாம் பாண்டிநாட்டின் தலைநகராகிய மதுரையம் பதியில் திருமலைராயன் ஆளுகையில் பழுதறவோதிய பாவலராகிய படிக்காசுத் தம்பிரானைச் சிறையிலடைத்துவைக்க, அவர் அநேகநாள் இருந்து பிறகு ஒருநாள் அரசனிடம்,

"நாட்டிற் சிறந்த திருமலை யாநல்ல நாகரீகா
காட்டில் வனத்தில் திரிந்துழ லாமல் கலைத்தமிழ்தேர்
பாட்டிற் சிறந்த படிக்கா செனுமிந்தப் பைங்கிளியைக்
கூட்டி லடைத்துவைத் தாய்இறை தாவென்று கூப்பிடுதே"

என்றபாட்டை யெழுதி யனுப்பினார்.

அந்தோ ! என்னே இவர் வாக்கு ! இவரையும் சிறையிலடைப்பாருண்டோ ! இக்கவியை வாசித்த உடனே மன்னன் இவரைச் சிறையினின்றும் விடுத்தான். மிகவும் சிறப்புற்று விளங்கும் புகழேந்திப் புலவரது நளவெண்பா எவ்வளவு சொற்சுவையுள்ளது ? நம்மால் அளவிடுதல் கூடுமா ? கம்பராமாயணம் எனும் பெருங்காவியத்தினும் மிகவும் சொற்சுவை, பொருட்சுவைகளில் சிறப்புற்றநூல் ஏதேனும் உண்டா? இக்கம்பன் உலக வியற்கைப் பொருளை வருணித்திருக் கின்றனனே; இவனுக்கு எவ்வாறு தெரியும் எனக்கேட்டால் சீவகசிந்தாமணி யென்னும் ஒருகடலில் ஓர் அகப்பை நீர் மொண்டுகொண்டதாகக் கூறப்படுமென்றால், அச்சீவக சிந்தாமணியின் தன்மையென்னே ? அஃதேபோல், ஒவ்வொரு நூல்களிலும் இதனது இனிமை விளங்குமென்பதை புலவர்க்கு ஔடதமாகிய நைடதத்தில்,

"அமிழ்தின முனிந்துசாரல் அருவிதாழ் மலயமீன்ற
தமிழினு மினியதீஞ்சொற் றையலீண் டிருந்த கோமான்
நிமிழ்திரை கொழித்த முத்த மேழைநின் முறுவல்காட்டுங்
கமழலந் துறைசூழ் தெண்ணீர்க் கங்கைநா டாளும் வேந்தே"

எனக் கூறப்பட்டமையி னின்று முணர்தலாகும். மற்றும் தமிழிலுள்ள நூல்களில் ஏதேனும் ஒன்றை எடுத்துக்கொண்டு படித்துப் பார்த்தோமேயானால் அதனுண்மை விளங்கும். உதாரணமாக, இராமாயணத்தை எடுத்துக்கொண்டால் அது, படிக்கப்படிக்கத் தெவிட்டாத செழுந்தேனையொப்ப விருக்கக் காணலாம். பின்னும், அவ்வவ்விடங்களில் எத்தகைமையாக விஷயம் கூறப்பட்டிருக்கிறதோ அஃதேபோல், நாமும் மனோநிலைமையை யடைதலைப் பார்க்கலாம். இதனால் நமக்கு என்ன விளங்குகிறது ? தமிழிற்கு மனதைக் கவரச்செய்யும் சக்தியுளது. மற்றும் மிகவும் அற்புதமாகவும், சொற்சுவை, பொருட்சுவையோடும் ஒட்டக்கூத்தர் தம் இராமாயணத்தில் இராமன் அசுவமேதயாகசாலைக்குப் போந்தான் என்பதை யுரைக்க வந்தவர் இராமாயணத்தை யுள்ளடக்கி மிகவும் இனிமையாகப் பாடியிருக்கிற பாடல்களைப் படிக்குந்தோறும், பின்னொருமுறை படிக்க விருப்பமுண்டாகும் என்பதிற்றடையோ?

(ஒட்டக்கூத்தர் இராமாயணம்.)

I. "கம்புவைத் தரித்த கையில் கார்முகந் தரித்தான் வந்தான்
அம்புயக் கண்ணன் வந்தான் அன்பருக் கன்பன் வந்தான்

தம்பியர்க் கினியான் வந்தான் தசரத ராமன் வந்தான்
உம்பருக் கமிழ்தம் முன்னாள் உதவிய ஒருவன் வந்தான்.

II. மனுகுலம் விளங்கத் தோன்றி வரிசிலை யிளையா னோடும்
முனியொடும் போனான் வந்தான் முப்புர மெரித்த வில்லி
தனுவினை யிறுத்துச் சீதைத் தனைக்கரம் பிடித்தான் வந்தான்
அனையவ ளுடனே மீண்டு மயோத்தியி லடைந்தான் வந்தான்.

III. தாயுரை தலைமேற் கொண்டு தையலை யுடனே கொண்டு
தீயவெங் கானஞ் சேர்ந்த செருவிலி வல்லி வந்தான்
தூயமா முனிவன் முன்பு தோன்றிய தூயோன் வந்தான்
மாய்மா ரீசன் மாள வரிசிலை யெறிந்தோன் வந்தான்

IV. அநுமனை யடிமை கொண்டாங் காயிரங் கதிரோன் மைந்தற்கு
இனியனாய் வாலி மாள எரிசரந் தூர்த்தோன் வந்தான்
நினைவதன் முன்ன மாழி நீரெலாம் நெருப்ப தாகக்
குனிசிலை வளைத்தோன் வந்தான் கோசலை நாடன் வந்தான்

V. குன்றினு லாழி கட்டிக் கொடுந்திறற் சேனை யோடும்
சென்றிராக் கதரை யெல்லாஞ் செருக்களத் தவிய நூறித்
தன்றிற லழிந்து நின்ற தசமுகன் வலிமை கண்டாங்கு
இன்றுபோய் நாளை வாவென் றியம்பிய ராமன் வந்தான்

VI. முன்னம்நாம் சொன்ன நாளின் முடுகிநாம் செல்லோ மாயின்
வன்னியில் பந்தன் வீழ்வன் என்றுதன் மனத்தி லுன்னி
அன்னவ னெரிவி ழாமல் அநுமனை முன்னே யேவிப்
பொன்னகர் அடைந்தான் வந்தான் புவனமூன் றுடையான் வந்தான்."

என்னும் செய்யுட்களால் தமிழ்ச் சுவையை விளக்கியிருப்பது என்ன இனிமை. கூத்தர் பிரான், தாம் ராமாயணம் முழுமையும் பாடப்பாக்கியம் பெறாததனாலும், அவ்வாறே தாமும் ஓர் இராமாயணம் பாடினும் கம்பனது வாக்கிற்கு ஈடாகாதென்பதை யறிந்தும், தமக்கு வாய்த்த இந்த விடத்தில் இராமாயண சாரசங்கிரகத்தை யுரைத்தனர்போலும். இவ்வாறே ஒவ்வொரு நூலினுமுளது. கம்பராமாயணத்தில் உலாவியற் படலத்தில் ஒரு செய்யுளை எடுத்துக்கொண்டோ மாயின்,

கம்ப இராமாயணம்.

"தோள்கண்டார் தோளே கண்டார் தொடுகழற் கமல மன்ன
தாள்கண்டார் தாளே கண்டார் தளக்கைகண் டாரு மஃதே
வாள்கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார்
ஊழ்கண்ட சமயத் தன்னார் உருவுகண் டாரை யொத்தார்."

இதனது பொருள் யாவர்க்கும் வெளிப்படை எனினும் முக்கியமாக நோக்கத்தக்கது ஒன்றுளது. அஃதென்னவெனில், உலகவியல்பானது வந்தவர் முகத்தை முன்னே நோக்குறுந் தன்மையது: ஆனால், இவரோ முதலெடுத்ததும் தோள்கண்டார் தோளேகண்டார் என ஆரம்பித்தனர்.

இதன் காரணமென்னையோவெனில், பெண்களுக்குப் புருடர்களுடைய புயத்தை நோக்குறும் தன்மை இயல்பு; அன்றியும் காவியத்தில் முன்னுக்குப் பின் முரண்படுதல் கூடா. மற்றும் தாம் இவ்விராமாயணத்தை ஆரம்பித்து நூலின்பயனைக் கூறுமிடத்து,

"நாடிய பொருள்கை கூடும் ஞானமும் புகழு முண்டாம்
வீடியல் வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கும்
நீடிய வரக்கர் சேனை நீறுபட் டழிய வாகைச்
சூடிய சிலையி ராமன் தோள்வலி கூறு வோர்க்கே."

எனக்கூறியிருத்தலின் நயம் நன்குணர்ந்ததே. ஆதலால் முதலில் தோளைக்கூறினர். மற்றும் தாடகை முதல் இராவண கும்பகர்ணனாதியர்வரை தம் புயபலத்தால் வென்றமையுங் காண்க. இரண்டாவதாகத் "தொடு கழற் கமலமன்ன தாள்கண்டார் தாளேகண்டார்" என்று கூறியிருப்பதைக் காண்க. ஏனெனில், கௌதமமுனிவரது பத்தினியாரின் சாபந்தீர்த்தகாலத்து விசுவாமித்திரரே,

"இவ்வண்ணம் நிகழ்ந்தவண்ணம் இனியிந்த வுலகுக் கெல்லாம்
உய்வண்ண மன்றி மற்றோர் துயர்வண்ண முறுவ துண்டோ
மைவண்ணத் தரக்கி போரில் மழைவண்ணத் தண்ண லேயுன்
கைவண்ண மங்குகண்டேன் கால்வண்ண மிங்குகண்டேன்"

எனத் துதித்திருப்பதும் காணலாகும். மற்றும் நாம் பாகவதர்களது ஹரிகதையில் இராமனது பாதபங்கயப் பண்பைப்பகரும் கதையையும் அறியலாகும். அஃதாவது:—மிதிலா நகரத்துக்குச்சீராமர் தமது தம்பியுடனும் விசுவாமித்திர முனிவரால் கூட்டிக்கொண்டு போகப்பட்ட காலத்து கங்கையைக் கடக்கநேரிட்டது. அப்பொழுது அவ்விடம் ஒரு தெப்பக்காரன் வந்தனன். அவன் இராமரைத்தவிர மற்ற விருவர்களை யோடத்திலேற்றிவிட்டு, ராமரை மாத்திரம், தம் கையால் அவரது பாதகமலத்தைக் கழுவிய பின்னரே அவர் ஓடத்தில் ஏறத்தக்கவர் எனக் கூறினன். அதைக் கேட்ட இலக்குமணன் ஏன் அவ்வாறு கூறினை என்று கேட்க, அவன், தசரதராமரது பாததூளிபட்டு ஒரு கல் பெண்ணுருவானால், இவரது பாதமே எனது தெப்பத்திற் பட்டால் என்னுமாதென்று வினயமாய்க் கூறினனும்(அதாவது பக்தி). பாதத்தின் பெருமையை விளக்கும் வண்ணம், கம்பரும் கூறினர். மூன்றாவது, "தடக்கை கண்டாருமஃதே" என்று கூறியகாரண மென்னையோ வெனில் இளையராயிருந்த இராமர் விசுவாமித்திரனது யாகத்தைத் துஷ்டர்களினின்றும் காக்குமாறு யாகசாலையில் போந்தகாலத்து சுபாகு மாரீசன் தாடகை எனும் மூவர்களின், கொடுஞ் செயல்களைக் கண்ணுற்று மற்ற இருவர்களில் ஒருவனைக்கொன்றும், மற்றவனைப் புறத்துத்தள்ளியும் தாடகையைக்கொன்றார். அதை நம் கவிராசர் கூறுமிடத்து,

சொல்லொக்குங் கடியவேகச் சுடுசரங் கரியசெம்மல்
அல்லொக்கு நிறத்தி னாள்மேல் விடுதலும் வைரக் குன்றக்
கல்லொக்கு நெஞ்சிற் றங்கா தப்புறங் கழன்று கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற் றன்றே"

எனக் கூறியிருப்பதாலேயே கையினது வலிமை காணப்பெறும். இவ்வாறு கண்ணுற்றவர்களில் எவரேனும் இராமபிரானது உருவம் முழுமையும் பார்த்தனரோ வெனில், உலகத்தில் பலவேறு சமயங்கள் உள; அவற்றுள் எவரையா ஆதிகடவுளைக் கண்ணுறக்கண்டார்? ஒருவருமிலர். அஃதேபோல் இவர்களிலுமிலர். இதில் இராமாயணத்தின் தன்மை விளங்கும்.

(தொடரும்)

R. S. சாம்பசிவ சர்மன்,
தமிழ்த்தொண்டன்.

---

## இல்லறம்—விக்கிரகாராதனை

(236-ம் பக்கத்தொடர்ச்சி)

அன்றியும் சராசரமயப் பிரபஞ்ச முற்றுமே யவனுக்குச் சரீரமாகக் கூறப்பட்டது. மஹாத்மாக்களா யுள்ளவர்கள் சராசரங்க ளெல்லாவற்றிலும் பரம்பொருளைப் பாவித்துத் தியானிப்பார்கள். உருவமே யில்லாத வாகாசத்திலும் பாவிப்பார்கள். ஆயினும் சகலரும் பரப்பிரமத்தை யாராதிப்பதற்குரிய பல ரூபங்களை வேதங்களே கூறின. அவற்றையே வைதிகர்கள் உறுதியாகக் கொண்டு பாவிக்கின்றார்கள்.

"அக்னௌதிஷ்டதி விப்ராணும் ஹ்ருதி திருஷ்டதியோகி
பிரதிமாசவப் பிரபுத்தாணும் சர்வத்திர விதிதாத்மநாம்"

"பிராமணர்களுக்கு அக்கினியில் (கடவுள்)தோன்றுவர்; யோகிகள் இருதயத்திற் காண்கிறார்கள்; மற்றைய (பக்திமான்களுக்கு) விக்கிரகத்தில் சாட்சியா யிருக்கின்றார்" என்று கண்ணபிரான் கீதையிற் கூறியருளினார். (பக்திமான்கள் என்றதனால் முதற்கூறிய பிராமணர் யோகிகளை விலக்கியதல்ல. அவர்களும் விக்கிரகத்தில் தரிசிக்கிறார்கள் என்பதே பொருளாகக் கொள்ளவேண்டும்.) அடுத்தவசனத்தில் ஞானிகளுக்கு எங்கும்காணப்படுகிறான் என்று கூறியருளினர். இதில் எங்கும் என்பது சகல பிரபஞ்சத்தையும் குறிக்குமாதலால், இதனுள் விக்கிரகமும் அடங்கும். இதனால் பண்டிதர், பாமரர், ஞானிகள் எல்லாருக்கும் விக்கிரகாராதனை மிகச்சிறந்ததென்று புலப்படுவதைப் பேரறிவாளர் காணமற் போகார்கள். பூர்வகாலத்துப் பெரியோர்கள் எல்லாரும் விக்கிரகாராதனையி னாலேயே சகல சித்திகளையும் பெற்றார்கள் என்று நன்றாய்ப் புலப்படுகின்றது.

எங்ஙனமெனின், நமது பெரியோர்களுக் காதாரமாயிருந்த வேதமே விக்கிரகாராதனையை விதித்தது. "பரப்பிரமம் உருவமற்றது, கைகால் முதலிய அவயவமில்லாதது, கண் முதலிய இந்திரியங்களால் காணப்படாதது, காட்சிக்கெட்டாதது" என்று பிரமத்தின் நிர்க்குண சொரூபத்தைக் குறித்துக் காட்டியவேதமே, "அவன் சூரியமண்டலத்தில் வசிக்கிறான். சொர்ணமயமான சரீரத்தை யுடையவன், ஹிரண்யபாகு, பினாகபாணி, திரிநேத்திரன், உமாசகாந்தன், சங்கரன், நீலகணடன்," என்பனவாதி அநந்த வசனங்களால் பரம்பொருளின் சகுண சொரூபத்தையும் வருணித்தது. இதனால் பரம்பொருளுக்குச் சகுண நிர்க்குணமாகிய இருவகைச் சொரூபங்களு முண்டென்று விளங்குகின்றது. இதனால்தான் ஸ்ரீ இராமானுஜாசாரியரும் தமது விசிஷ்டாத்வைத பாஷ்யத்தில் "பிரமத்துக்குச் சகு

ணம் நிர்க்குணமென விருவகைச் சொரூபங்களுள. அவற்றுள் நிர்க்குண சொரூபம் பாவனைக் கெட்டா தாதலால் அது உபாசனை செய்வதற் கேற்றதல்ல. சகுணசொரூபமே பாவனைக் கெட்டத்தக்கது. அது உபாசிக்கக்கூடியது'' என்று கூறியருளினர். அத்வைத சித்தாந்த பிரவர்த் தகாசாரியராகிய ஸ்ரீ சங்கரமுனி பிரஜனும் பரப்பிரமத்துக்குச் சகள சொ ரூபமுண்டென்று ஒப்பித் தமது மடாலயங்களில் சந்திரமௌளீசுவர மூர்த்தியை ஆராதிக்க வமைத்தனர். ஸ்ரீ ஹரதத்தாசாரியர், ''தமூஷ்திகி'' என்ற மந்திரத்தினல் மானசிகம், வாசிகம், சாயிகம் என்கிற மூவகை ஆராதனை விதிக்கப்பட்டதென்று கூறி விக்கிரகாராதனையை விளக்கினர். இவற்றால் கற்றார், கல்லார் எல்லார்க்கும் விக்கிரகாராதனம் விதிக்கப் பட்டது.

இதன் காரணம், மனமோ எத்தைத் தான் ஒருதரங் கண்டதோ அதை மறவாமற்கருதும் சத்தியுடையது. காணாததும் இல்லாததுமான பொருளை யொருபோதும் சிந்தியாது. இங்ஙனமாயின் உருவமே யில்லா ததும், ஒருபோதும் காணப்படாததுமான பொருளை யெப்படிச் சிந்திக் கும்? ஒருபோதும் சிந்தியாது. கண்டறிந்த பொருளைச் சிந்திப்பினும் ஒன்றிலேயே நிலைத்து நில்லாது, ஒன்றைவிட் டொன்றில் தாண்டிச் செல்லு மியல்புடையது. எவ்வாறாயினும் அறிந்தபொருள்களில் செல்லு மேயொழிய அறியப்படாத பொருள்களை ஒருபோதும் சிந்தியாது. இது எல்லாரும் சுயாநுபவத்தால் அறியக்கூடியதேயாம். இங்ஙனமாக உருவமற்ற பரம்பொருளை யாம் சிந்திக்கின்றேமென்பார் கூற்று ''ககனார விந்தங் கலத்தேன் சொரிந்தது, மலடிமகன் வயிறாரக் குடித்தான்'' என்ற வசனத்தோடொக்கும். நிர்க்குண பிரமத்தை மனதிலேயே சிந்திக்கின் றேம் என்பார், தம்மைப் பிறரெல்லாரும் ஞானியென்று கருதுமாறு செய்விக்க எண்ணும் வஞ்சகரோ டொப்பாவர்.

இப்பொழுது ஐவகை மதங்களே உலகத்தில் பிரபலமாக வழங்கிவரு கின்றன. அவையாவன;—ஆரியம், பௌத்தம், யவனம், மகம்மதியம், கிரிஸ்துவமத மென்பனவேயாம். இவ்வைவகை மதஸ்தர்களும் பிம்பாரா தனையை ஒப்பினவர்களேயாம். ஆரியர்களைப்பற்றிக்கூறவேண்டியதில்லை. பௌத்தர்கள் கடவுளை நம்பாதவர்களாயினும், தமது ஆசாரியர்களை விக் கிரக சொரூபமாகச் செய்து வழிபடுகின்றார்கள். அவர்களுக்கு ஆலயங்க ளும் மடங்களுமுண்டு. யவனர்களோ அக்கினியின்கண் கடவுளை வழிபடு கின்றார்கள்; அன்றியும் நமது தேசத்தில் வழங்கும் சிவலிங்கம்போன்ற ஒரு சொரூபத்தைச்செய்து அதற்கு ஷிவ்ப என்று பேரிட்டுப்பிரதிஷ்டை செய்து வழிபடுகின்றார்கள். மகம்மதியர்களும் மனிதர் கை போன்ற சொரூபத்தைச் செய்து வைத்து வணங்குகின்றார்கள். பெரியோர்கள் சமாதியிலும் தொழுகின்றார்கள். கிறிஸ்துவர்களும் கடவுளுக்குப் பலி பீடத்தைக் கட்டியும், ஏதோ ஒருவகையான சொரூபத்தை ஸ்தாபித்தும் வணங்கிவந்தார்கள். கிறிஸ்துவர்களுள் ''காத்தலிக்கர்'' என்ற ஒருபட்சத் தார் இன்னும் தேவாலயங்களிற் சொரூபாராதனை செய்துவருகிறார்கள். ''புரோடெஸ்டான்ட்'' என்ற ஒரு கட்சியார் மாத்திரமே விக்கிரகாரா தனையை மறுப்பவர்கள். நம்மவருள்ளும் சிலர் அக்கொள்கையை அநு சரித்து விக்கிரகாராதனையை மறுத்துவருகிறார்கள். நாமிது கூறிவந்த

தனால் விக்கிரகாராதனை அளவுகடந்த காலமாகவே வழங்கிவருகிறது என்பதும், அது வைதிகமே யென்பதும், அது மோட்ச நெறியாமென்பதும், காலசக்தியால் சிலர் அதனைமறுத்துத் தமது புத்திக்குத் தோன்றியவாறே கூறுகிறார்களென்பதூம் இனிது விளங்கும். (தொடரும்)

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

## பரிதாபம்.

சகோதர சகோதரிகாள்! நமக்குக் கிடைத்த கார்த்திகை மாதச் சஞ்சிகை 185-ம் பக்கத்தில் ஆனந்தன்மேல் அவதூறு என்கிற தலையங்கத்தைக் கண்டதும் எம்மனம் புண்ணிடைக் கோலாகின்றது. எனினும் நமது எல்லாச் சகோதரர்களும் புரட்டாசிமீ சஞ்சிகையைப் பத்திரிகாசிரியர் குறித்தவாறே மறுமுறை பார்த்தே இருப்பார்களென்றும், அச்சஞ்சிகை 94-ம் பக்கத்தில் ஆரம்பக்கல்வி உபாத்தியாயர்களைப்பற்றி வியாசம் எழுதி இருப்பதில் எவ்விதமான பழிப்பும் இல்லை என்கிற முடிவுக்கு வந்திருப்பார்களென்றும் நம்புகிறோம். ஷை வியாசம் எழுதின நமது சகோதரர் ஸ்ரீமான் பு. ஸ்ரீ. நாயுடு அவர்கள் தமது முன்னுரையிலேயே பழிப்பிற் கிடமில்லாத சொற்களைத் திருஷ்டாந்தப்படுத்தி சூசிப்பித்திருக்கிறார்கள். அவைகள் பெரும்பாலும் பாராட்டத்தக்கன. ஆனால் அவைகளைக் குற்றமாக எண்ணும் நமது சகோதரர் நாகபட்டினம் பகுதி உபாத்திமைக் கூட்டத்தார்களும் மறுமுறையும் பார்த்திருப்பார்களென்றும் அவர்களுள் தோன்றும் சந்தேகங்களை நமது ஆனந்தன் வாயிலாகவே தெரிவித்திருக்கலா மென்றும் எண்ணுகிறோம். சகோதரர்களே! கொடிதான காகிதப் பஞ்சகாலத்தில் எல்லாப் பத்திரிகைகளும் தம்முடைய உருமாற்றங் குறைந்திருக்கின்றன வென்பது தெரிந்த விஷயமே. நமது ஆனந்தனோ சகோதரப்பெருக்கத்தின் சந்துஷ்டியாலோ, வேறு எவ்விதத்தாலோ தன்னுடைய உருவங் குறையாமலே உலவுகின்றது. நமது தமிழ் நாட்டின்கண் உலவும் பத்திரிகைகளில் நமது ஆனந்தனும, ஸ்ரீமான் கோ. வடிவேலு செட்டியாரவர்களின் லோகோபகாரியும் ஒரே சகோதரரென்னலாம். லோகோபகாரி ஆரம்பத்தில் 16-பக்கங்களில் வெளியானது; தத்காலம் 8 பக்கங்களுடனேயே வெளியாகின்றது. இவை இரண்டுமே நமக்கு முக்கியமான இகபர சாதனங்களுக்கு இன்றியமையாதன வென்னலாம்; இதைப்பற்றி யாம் அதிகங் கூற வரவில்லை.

நமது ஆனந்தனோ எவ்வித வறுமையையுங் கவனியாது நமது மனதைக் களிப்பித்து வருகின்றான். நமது நண்பர் ஒருவருடன் நாம் ஆனந்தபோதினியைப்பற்றிப் பேசியபோது அருகிலிருந்தவர் "என்ன ஆனந்தபோதினிதானே! இரண்டு ராத்திரி ட்ராமாச்சார்ஜு! வாத்தியாருக்காக என்று வாங்கிப் போடுங்கள்" என்றார். அதற்காக யாம் சிறிது மனவாட்டம் அடைய நேர்ந்தது.

சந்தா குறைந்ததென்கிற எண்ணத்துடன் மித்திரர் கூறுகிறாரென்றும், தேசநன்மை இவ்விடத்து எவ்வளவிருக்கிறதென்றும், தோன்றுவதுடன், இக்காலத்தில் தேசாபிமானிகள் கல்வி, செல்வம், தற்போது

குறைந்துள்ள நமது நாட்டின் க்ஷேமத்திற்காக உழைப்பது எவ்வளவு துர்லபமென்பதும் புலனாகும். நமது தேயத்தில் தக்க கல்வி இன்மையே நமது ஒற்றுமை இன்மைக்குக்காரணம் என்று பல நிபுணர்கள் கூறுகிறார்கள். அவைகள் அவ்வளவும் உண்மை என்றே நம்புவதற் கிடமுண்டு. சென்ற வாண்டில் கூடின வித்தியா இலாகா சபையில் திருச்சி ஜில்லா பாடசாலைகளின் அஸிஸ்டென்டு இன்ஸ்பெக்டராவர்களான ம-ா-ா-ஸ்ரீ S. G. தானியேல் அவர்கள் பேசியது யாவரும் அறியத்தக்கது. அதாவது:—"உலகத்தில் ஒவ்வொரு தேயங்களுக்கும் சத்துருவினால் கெடுதி யுண்டாகா திருப்பதற்காகவே நமது கருணை பொருந்திய ராஜாங்கம் இந்த மஹா யுத்தத்தில் தலையிட்டது, அவ்வாறு முன் வந்ததால் எல்லாத் தேயங்களிலுமுள்ள சத்துருக்கள் அனைவருந் துறத்தப்பட்டார்கள். சகோதரர்களே கவனித்துப் பாருங்கள். நமது தேயத்திலுள்ள சத்துருவோ இன்னும் அவ்வாறு துறத்தப்படவில்லை" நாம் அச்சத்துருவுடன் வெகுகாலம் போர் புரிந்து வருகின்றோம். அச்சத்துரு யாரென்பீர்களோ கொடிய ஜர்மானியர்களல்ல, நாகரீகமற்ற வேறு ஜாதியார்களுமல்ல. வேறு யார்தானெனில் கல்வி யறியாமை—படிப்பின்மையே. பாருங்கள்! இந்தச் சத்துரு நமது தேயத்தில் அதிகமாக முன்னேறி இருக்கின்றான்! இச்சத்துருவை நாம் சீக்கிரத்தில் ஓட்டமுடியாது. கொஞ்சங் கொஞ்சமாகத்தான் துறத்த முடியும். ஆனால் அந்தச்சத்துருவைத் துறத்தி முறியடிக்கும் போர்வீரன் யாரென்பீர்களோ? ஆரம்பக் கல்வி உபாத்திமார்கள்தான் - நீங்கள்தான் பொறுப்பாளிகள்-நீங்கள் ஒவ்வொருவரும் புதியமுறையை அனுசரித்து நந்தேயச்சிறுவர்களை முன்னுக்குக் கொண்டுவரவேண்டும். சகோதரர்களே! இந்த உபதேசமானது நமக்கு எவ்வளவு உத்சாகத்தைக் கொடுக்கிறது! அறிவின்மை என்னுஞ் சத்துருவுடன் நாம் போராடவேண்டுவ தவசியமாகின்றது. இச்சந்தர்ப்பங்களில் நாம் தூங்காமலிருக்க வேண்டுமென்னும் நோக்கத்துடனேயே நமது கனம் பண்டிதர் சொல்லி இருக்கிறார்கள். அந்தப்போதம் நமக்கு அவசியமானதே என்று ஒவ்வொரு புத்திமான்களும் ஒப்பத்தகுந்ததே. சகோதரர்களே! இதைப்பற்றி நாம் ஆனந்தனுக்காகப் பரிந்துபேச வந்ததாகக் கருதவேண்டாம். ஆனந்தன் எல்லோருக்கும் உரிமையான சகோதரன் என்பது பிரத்தியக்ஷம். ஆனால் ஆனந்தனிடம் மிக்க மேலானதேஜஸு இருக்கிறதென்று அறிவாளிகள் கூறுகின்றனர்.

ஆனந்தன், தனது ஆறும் வயதிலேயே பல்லாயிரம் சகோதரரை அடைந்துள்ளான். இவன் பூரணவயதில் சக்கிரவர்த்தியின் புதல்வருக்கும் மேலாவனென்றும், கொடிய சூரனைவீழ்த்தித் தேவர்க்கு க்ஷேமமளித்த குமர வேலேபோல் நம்நாட்டின் கல்விக்குறைவை நீக்கிப் பூமியில் அரிய பலன்களை நமக்கு அளிப்பானென்றும் ஏதோ காலபலத்தால் நமது நாகப்பட்டினம் உபாத்தியாயர்களின் கூட்டத்தில் நேர்ந்த அபிப்பிராய பேதங்களை மாற்றி, அவர்களும் ஆனந்தனிடம் அன்பும் நன்றி யறிதலுமுள்ளவர்களாக இருப்பார்களென்றும் எல்லாம் வல்ல இறைவனை நாடோறும் பிரார்த்திக்கின்றனம். சுபம். ஓம் தத் ஸத்.

S. வேலாயுதன்,
தலைமை உபாத்தியாயர், போர்ட் பாடசாலை, நாத்தம்பூர்.

# அந்தரக்களவு அல்லது தபால் கொள்ளைக்காரர்கள்

(238-ம் பக்கத் தொடர்ச்சி)

## 4-வது அத்தியாயம்.

ஆனந்த விங் வீதியின் முன்பக்கம் ஹோட்டலில் தங்கியிருக்கும் தன் ஆசாமி மேலேயே கண் வைத்திருக்கிறான் என்று நாம் கூறவேண்டியதில்லை.

இரங்கநாதன் பொழுதமர்ந்தபின் ஒரு வண்டி பேசிக்கொண்டு வரச் சொல்லி ஹோட்டலி லிருந்து புறப்பட்டான். வண்டி நகரத்தின் சந்தடியுள்ள பாகங்களனைத்தும் கடந்து நகர ஓரத்தில் தனியேயுள்ள ஒரு பெரிய மாளிகை போன்ற விடத்தின் எதிரில் நின்றது. அம் மாளிகை ஒரு பெரிய தோட்டத்தின் முன்பக்க மிருந்தது. தோட்டம் பிரம்மாண்டமானது; மிக்க அழகாய் அமைக்கப்பட்டது; இடை யிடையில் உலவுவதற்காக அழகிய செப்பனிட்ட பாதைகளையுடையது; ஓரங்களில் பிரம்மாண்டமான விருட்சங்கள் இருப்பதால் அவை அவ்வீட்டையும் தோட்டத்தையும் அடியோடே மறைத்துக்கொண் டிருந்தன.

இரங்கநாதன் அவ்வீட்டி னெதிரில் இறங்கி வண்டிக்காரனுக்குச் சத்தமளித்து அனுப்பி விட்டு, வெளி வாயிற் கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்று கதவைத் தட்டினான். ஒரு வேலைக்காரன் வந்து கதவைத் திறந்தான். இரங்கநாதன் அவனிடம் ஒரு சீட்டைக் கொடுத்து இதைக் கொண்டுபோய் உங்கள் எஜமான் சாமிநாதப் பிள்ளையிடம் கொடு என்று கொடுத்தான்.

பத்து நிமிடங்களுக்குட் இரங்கநாதன், வீட்டின் மாடியின் மேலிருக்கும் ஒரு அறைக்குள் அழைத்துக்கொண்டு போகப்பட்டான். அங்கு அவன் அழகான மீசையை யுடைய ஒரு வாலிபனைச் சந்தித்தான். அந்த வாலிபன் முகத்தில் அழகாவது அறிவின் பிரகாசமாவது இன்றேனும், அகங்காரமும், கல் மனமும், இழிவான போகங்களின் இச்சையும் நன்கு பிரகாசித்தன.

இவன்றான் கொலையுண்ட கோபாலுசாமி ஸர்தாரின் ஆஸ்தியை யடைந்த சாமிநாதன் என்பவன். சொத்து கிடைத்ததே தலை கால் தெரியாமல் அதைக் கெட்ட வழிகளில் செலவழிப்பதே யிப்போது அவன் வேலை. அவன் ஒரு நாளும் தன்னறிவோடு படுக்கைக்குச் செல்வதே யில்லை. ஆனால் இன்று தன் பிரதான நண்பன் வருகையை யெதிர் பார்த் திருப்பதால் சற்று ஸ்மரணையோ டிருக்கிறான். இவர்களிருவர்களுக்கும் இருக்கும் சம்பந்தம் இத்தகைய தென நமது கதைப்போக்கில் தானே வெளிவரும். ஆயினும், நமது இரங்கநாதனுடைய குணத்திற்கு இவன் தாழ்ந்தவனல்ல என்று கூறலாகும்.

சாமிநாதன் தன் நண்பனாகிய இரங்கநாதனைக் கண்டதே,

"ஆ! அதிஷ்டம் எப்படியிருக்கிறது? விவகாரத்தை ஒழுங்காய் முடித்துக் கொண்டாயா?" என்றான்.

**இரங்கநாதன்:**—"ஒன்றுமே யில்லை. எல்லாம் அடியோடு விரோதமாகவே நிகழ்ந்து விட்டது. முரட்டுத்தனமாகவே வேலை செய்ய

வேண்டும்போ லிருக்கிறது. அப்போதும் அனுகூலமாய் முடியுமோ வென்பது சந்தேகமே" என்றான்.

இரங்கநாதன் ஹோட்டலில் வண்டியேறிய வுடனே கவனித்திருப் பானேல் தன்வண்டி புறப்படும்போது குரங்கைப்போல் ஒரு மனிதன் அருகிலிருந்த மரத்தின் நிழலிலிருந்து ஒரு பாய்ச்சலாய்ப் பாய்ந்து வண் டியின் பின்பக்கத்தில் தொத்திக்கொண் டிருப்பதைக் கண்டிருக்கலாம். மறுபடி இவன் சாமிநாதன் வீட்டெதிரில் வண்டியைவிட் டிறங்கும்போது கவனித்திருந்தால் அதே உருவம், வண்டி நின்றதே தட்டென்று கீழே குதித்துப் பக்கத்திலிருந்த மரநிழலில் பதுங்கிக்கொண்டதையும் அறிந்து கொண் டிருக்கலாம். இரங்காநாதனோ இரண்டு சந்தர்ப்பங்களையும் கவ னிக்கவில்லை.

நேயர்களே! அவ்வாறு வண்டியில் தொத்திக்கொண்டு வந்தவன் நமது ஆனந்தலிங்கே யென்று நாம் கூறாமலே நீங்கள் அறிந்து கொண் டிருப்பீர்கள்.

இரங்கநாதன் வீட்டிற்குள் போய்ச்சேர்ந்ததே, ஆனந்தலிங் நிழல் களிலேயே பதுங்கிக்கொண்டு வீட்டின் பின்பக்கம் சென்று பார்த்தான். அங்கு மேல்மாடியில் ஒரு அறையின் சாளரத்தில் தீபவொளி தெரிந்தது. அந்தச் சாளரம் பூமிமட்டத்தி லிருந்து பதினைந்து அடி உயரத்திலிருக் கிறது. கீழிருந்து திராக்ஷக் கொடிகள் கொஞ்சம் உயரம் வரையில் சென் றிருக்கின்றன. சாளரத்திற்கு ஏறவேண்டுமாயின் அங்கிருக்கும் எழுதகத் தைப் பற்றி தொத்திக் கொண்டுதான் ஏறவேண்டும். எழுதகமும் பல மானதல்ல.

ஆயினும் ஆனந்தலிங் கொஞ்சக்காலம் வரையில் திமிங்கலவேட்டை யாடும் கப்பலில் மாலுமித் தொழில் செய்துகொண் டிருந்தான். அத னால் உயரமான இடங்களுக்குத் தொத்தியேறும் பழக்கம் உண்டாயிருக் கிறது. ஆகவே அவன் பூனைபோல் மெதுவாய் எழுதகங்களைப் பற்றித் தொத்தியேறிச் சாளரத்தில் தலையை நீட்டிப் பார்த்தான். அறைக்குள் யாருக்கோ அப்போதுதான் படுக்கை தயாரிக்கப்பட் டிருக்கிறது.

உடனே அந்த அறைக்குள் இறங்கிப் பூனைபோல் நடந்து அதைத் தாண்டி அதற்கு வெளியிலிருந்த ஒரு பெரிய கூடத்தையும் கடந்து, கடைசியில் வீட்டின் முன்பக்கத்தி லிருந்து ஏறிவரும் படிக்கட்டுகளின் தலைப்பிற்குச் சென்று சேர்ந்தான்.

பிறகு சற்றுநேரம் சந்தடி எங்கிருக்கிற தென்று கவனித்து அப்படி களின் வழியாயிறங்கிக் கீழ்க்கட்டிற்கு வந்து, அங்கு முன் இருக்கும் நீண்ட தாழ்வாரத்தின் ஓரமே சென்றான். அங்கு வரிசையாயிருந்த அறை களில் ஒன்றிலிருந்து வெளிச்சம் தாழ்வாரத்தில் தாக்கியதைக் கண்டு அங்குசென்று பார்த்தான். அது ஒருவாசிக அறைபோல் தோன்றியது. சற்று நெருங்கியபோது உள்ளே ஆட்கள் பேசும் சத்தம்கேட்டது; மெது வாய் எட்டிப்பார்த்தான். அந்த அறையின் ஒரு கோடியில் இரங்காநாத னும், சாமிநாதனும் நாற்காலிகளில் உட்கார்ந்துகொண் டிருக்கிறார்கள். அவர்கள் எதிரில் மேஜைமேல் சாராயப்புட்டியும் தின்பண்டங்களும் வைக்கப்பட் டிருக்கின்றன.

அவர்களிருவரும் மிக்க உற்சாகத்தோடு வார்த்தையாடிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் தாழ்ந்த குரலாய்ப் பேசுவதால் வார்த்தைகள் இன்னவையெனப் புலப்படவில்லை. அவர்கள் உட்கார்ந்திருக்கு மிடத்திற்குப் பின்னால் சற்று தூரத்தில் ஒரு பீரோ வைக்கப்பட் டிருந்தது. அதில் நிறைய புத்தகங்கள் இருந்தன. என்ன சந்தர்ப்பத்தாலோ அந்த பீரோவுக்கும் சுவருக்கும் இடையில் ஒரு ஆள் ஒளிந்து கொள்ளத்தக்க இடம் விடப்பட் டிருந்தது. (தொடரும்)

ஆரணி குப்புசாமி முதலியார்.

---

## பொது சமாச்சாரங்கள்.

மகா அற்புத மூலிகைகள்.—அமெரிக்காவைச் சேர்ந்த வெனிஜுவெல்லா, கொலம்பியா என்னும் நாடுகளிலுள்ள காடுகளில், இரண்டு அற்புதமான மூலிகைகள் கண்டுபிடிக்கப்பட் டிருக்கின்றனவாம். அவைகளில் ஒன்று, "யாய்" என்று அவ்வூராரால் அழைக்கப்படுவது; இதன் ரசத்தில் பத்துத் துளிகள் சாப்பிட்டவுடனே தூரதேசத்தில் நடக்கும் சம்பவங்கள் மனதிற்குப் புலப்படுமென்றும், "யாகு" என்றழைக்கப்படும் இன்னொரு மூலிகையின் தட்டையை எடுத்து அதன்மேல் தோலைச் சீவிவிட்டு, அதன் சதையை நீரில் நனைத்துச் சாப்பிட்டவர்களுக்கு பசிதாகமில்லாமல் இருப்பதோடு, அவர்களை எவ்வியாதியும் அணுகுவதில்லையென்றும், அமெரிக்காவில் பிரசுரமாகும் "டிரக்கிஸ்ட்" என்னும் பத்திரிகை தெரிவிக்கிறது.

மரமேறும் யந்திரம்.—பூமியிலிருந்து யாதோர் மரத்தின் உச்சிக்கு சிரமமில்லாமல் ஏறுவதற்குச் சாதகமான ஒரு புது யந்திரம் ருஷ்யசாஸ்திரி ஒருவரால் கண்டு பிடிக்கப்பட் டிருக்கிறதாம். இவ்வியந்திரம் விசேஷமாய், பனை, தெங்கு, கமுகு முதலிய மரங்களிலேறிக் காய், பழம் பறிப்பதற்கோ, கள்ளிறக்குவதற்கோ மிக்க பிரயோஜனப்படு மென்பதற்கோ ஐயமில்லை. இந்த இயந்திரத்தை நம் நாட்டிற் காண என்னாட் செல்லுமோ! இதைக் கண்டவுடன் மரமேறிகளுக்கு மனமடிவு நேரும் போலும்.

ஜோதி விருட்சம்.—சமீபத்தில் அபார மழை பெய்த காலத்தில் பவானி ஆற்றில் வெள்ளம் போனபோது, அதில் அடித்துக் கொண்டு வந்த கொம்புக்குச்சுகளை, கோபிசெட்டிப் பாளையத்தைச் சேர்ந்த கடலூர் கிராமத்திலுள்ள சிறுபிள்ளைகள் விறகுக்காகப் பொறுக்கிக் கொண்டுவந்து வீட்டு முற்றத்தில் காயவைத் திருந்தார்கள். அவர்கள் தகப்பன் அன்று இராத்திரி வெளியே வந்தபோது முற்றத்தில் போடப்பட்டிருந்த விறகு தீப்பற்றிக் கொண்டிருப்பதாகக் காணப்பட்டதால், தண்ணீர் விட்டுத் தீயை அணைக்கப் பார்த்தும் பிரகாசம் போகவில்லை. பிரகாசம் விளக்கு வெளிச்சத்தில் மறைந்து போய், இருளில் மாத்திரம் காணப்பட்டது. இவ்விஷயத்தைப் பற்றி அண்டை வீட்டுக்காரர்களிடம் தெரிவிக்க, அது முற்காலத்தில் முன்னோர்களால் சொல்லப்பட்ட ஜோதி விருட்சத்தின் கிளைக்கொம்பென்றும், அது அடுத்த பர்வதத்தினின்று ஜலத்தால் அடித்துக்கொண்டு வரப்பட் டிருக்கலாமென்றும் சொன்னார்களாம். அக்கொம்பு பிரகாசித்ததை பிரத்தியட்சமாய்க் கண்ட ஒரு நிருபர் தாமே இவ்விஷயத்தைத் தெரிவிக்கிறார்.

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்

## இரௌத்திரி௵ மாசி௴—சாலிவாகனம் 1843-கலியுகாதி 5022
## பசலி 1329-30—கோல்லம் 1095-96—ஹிஜரி-1338-39
## இங்கிலீஷ் 1921௵ பிப்ரவரி௴—மார்ச்சு௴

| மாசி௴ | பிப்ரவரி௴ | வாரம் | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 12 | ச | சவு-1-18 | உட்-1-8 | சி-1-மி | விவசாயம் |
| 2 | 13 | ஞா | பஞ்-7-34 | ரேவ-2-18 | சி 60 | கெர்ப்பாதானம் |
| 3 | 14 | தி | சஷ் 7-50 | அசு-2-32 | சித்-60 | தென்னை வாழைநட |
| 4 | 15 | செ | சப்-4-7 | பர-1-38<br>கிரு*58-22 | சித்-60 | சுபகாரியங்கள் |
| 5 | 16 | பு | அஷ்-0-36<br>நவ-55-41 | ரோக-37-11 | சித்-60 | பிரயாணம் |
| 6 | 17 | வி | தச-51-20 | மிரு-51-14 | ம-60 | ... ..... .. |
| 7 | 18 | வெ | ஏ-46-34 | திரு-49-55 | சித்-60 | யாத்திரை |
| 8 | 19 | ச | து-39-3 | புன-45-44 | சித்-60 | பிரயாணம் |
| 9 | 20 | ஞா | திர-33-39 | பூச-42-30 | சித்- 0 | சீமந்தம் |
| 10 | 21 | தி | சது27-49 | ஆயி-3 -21 | சி 33-ம | 9 செ. ஆயிலியத்தின்படி |
| 11 | 22 | செ | ○22-23 | ம- 33-54 | சித-60 | மகா மகம் |
| 12 | 23 | பு | பிர-17-27 | பூர-30-0 | அமி-60 | கெர்ப்பாதானம் |
| 13 | 24 | வி | து-13-11 | உத்-28-29 | ம-28-சி | பிரயாணம் |
| 14 | 25 | வெ | திரு-9-45 | அஸ்-27-59 | அ-27-சி | சீமந்தம் |
| 15 | 26 | சனி | சது-7-24 | சித்-27-36 | ம-27-அ | பிரயாணம் |
| 16 | 27 | ஞா | பஞ்16-14 | சுவா-27-25 | சி-27-உத் | விவசாயம் |
| 17 | 28 | தி | சஷ்-6-13 | விசா-29-28 | ம-29-சி | பிரயாணம் |
| 18 | 1921௵ மார்ச்சு௴ 1 | செ | சப்-7-42 | அனு-33-40 | சி-33-உ | விவசாயம் |
| 19 | 2 | பு | அ-10-15 | கேட்-37-4 | சி-37-ம | 8 செ. கேட்டையின்படி |
| 20 | 3 | வி | நவ-14-1 | மூல-43-31 | சித்-60 | வியாபாரம் |
| 21 | 4 | வெ | தச-18-34 | பூரா-48-17 | பி-43-சி | வாஸ்து அரசு |
| 22 | 5 | சனி | ஏ-23-51 | உரா-55-12 | சித்-60 | |
| 23 | 6 | ஞா | து-29-11 | திரு-60-0 | அ-60 | |
| 24 | 7 | திங் | திர-34-25 | திரு-1-47 | அ-2-சி | |
| 25 | 8 | செ | சது38-40 | அவி-7-48 | சி-7-ம | |
| 26 | 9 | பு | ●42-9 | சத-12-51 | சி-12-அ | |
| 27 | 10 | வி | பிர-44-26 | பூட்-17-9 | சித்-60 | |
| 28 | 11 | வெ | து-45-25 | உட்-20-9 | சி-20-அ | |
| 29 | 12 | சனி | திரு45-10 | ரே-22-56 | பி-22-சி | |
| 30 | 13 | ஞா | சது43-44 | அசு-22-26 | சி-22-பி | |

| | | | |
|---|---|---|---|
| சுக செவ் | கே | | |
| கு-பு | 13-மே சுக் | | |
| | | | குரு வ-ச |
| | | ராகு | சனி |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE
" ANANDA BODHINI" POWER PRESS,
15, VENKATESA MAISTRY STREET, MADRAS.